# *Ūḻiyaṉ*

## *Malar 14, itaḻ 51*

## *June 21, 1935*

Record no. 148

# ஊழியன்

மலர் 14 இதழ் 51




ஜெர்மனியின் மாலை வேளை.

## உள்ளுறை.

### முக்கிய விஷயங்கள்.



21—6—35

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கசு. சென்னை, 'யுவ ஹூ ஆனிமீ 7உ வெள்ளி (21-6-1935) இதழ் ருக


இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடிலாது
சொந்தவா சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
நந்தலிலா ஊழியமே நான்கொண்டே
நல்லனவென் நாளும் வாழ்க!

## ஜப்பான் அக்கிரமம்

'மெலியாரை வலியார் வாட்டுவது' என்ற அநீதிதான் இன்றைய பெரும்பாலான அரசுகளின் குலதர்மம். ஜப்பான் கடந்த பல வருடங்களாக பழம் பெரும் பூமியாகிய சீனுவுக்குச் செய்துவரும் பாதகம் உலகமெல்லாம் அறிந்தது. பன்முறை ஜப்பானியர் அடாத முறையில் கொடுமை யிழைத்து பல சீனப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டனர். சுமார் மூன்று வருடங்கட்கு முன்பு மஞ்சூரியாவில் கலவரமொன்றை எழுப்பி, சீனரைப் பல வழியிலும் துன்புறுத்தி, மறைமுகமாக அப்பிரிவை (மஞ்சூரியாவை) எடுத்துக் கொண்டு விட்டது உலகம் தெரிந்த உண்மை. மஞ்சூரியாவுக்கு இப்போது மஞ்சுகோ வென்று நாமம் சூட்டி ஜப்பானியரின் கைப் பிள்ளையாகிய பொம்மை அரசரொருவனை வைத்து ஆள்கின்றார்கள்.

இந்த ஹிமாலய அக்கிரமம் போதாதென்று, ஜப்பானியக் கொடியர்கள் மஞ்சுகோ பொம்மையின் துணையினுலும், ஆயுதப் பெருக்கின் முறுக்கினுலும், குமுறியெழும் கொடும் புத்தியாலும், கடந்த இரண்டு வருடங்கட்கு மேலாகச் செய்துவரும் சில்லரை சச்சரவுகள் கொஞ்ச நஞ்சமல்ல. சீனு முழுதும் ஜப்பான் ஒற்றர்கள்; சீனு முழுதும் ஜப்பான் புகைப் படக்காரர்கள்; சீனு முழுதும் ஜப்பான் சூழ்ச்சிக்காரர்கள்; எங்கும் ராணுவ ஆடை யொழித்த ராணுவ வீரர்கள்; போர் வெறி பிடித்த பொல்லா வெறியர்கள்! இப்படியாக போர்க் கோலத்தையே கட்டி நின்றனர் ஜப்பானியர் சீனு முழுவதிலும்! அதோடு ஒவ்வொரு கணத்திலும் சீனுவில் என்னென்ன நிகழ்ச்சிகள் தோன்றி மறைகின்றன வென்றும் கவனித்து வந்தார்கள். கூடுமான போதெல்லாம் சீனர்களை எழுப்பிவிட்டு பூசல்புரியச் செய்தார்கள். இந்த முயற்சியொருபால் கிடக்க, இன்னொருபால் ஜப்பான் யாத்ரீகர்கள் சிலர் சுமார் ஒரு மாதத்திற்கு முன்பு 'பெரிய சுவர்' என்ற பழங் கோட்டையைச் சுற்றிப் பார்த்து, புகைப்படமெடுத்துப் போனார்கள் என்று படித்தோம். இந்த நிகழ்ச்சி மற்றொரு தேசத்தில் நடந்திருக்குமானல் இதற்கு முன் அவ் யாத்ரீகர்கள் அனைவரும் வேறுலகம் புகுந்திருப்பார்கள் என்பது உறுதி. ஆனல் ஏழை சீனு கண்டும் காணுதது போலிருந்து விட்டது!

இத்தகைய செய்தியைப் பார்த்த அப்பொழுதே ஜப்பான் சீனுமீது மீண்டும் படையெடுத்து வருமென்று எவரும் யூகித்து விட்டார்கள். ஜப்பானின் நீண்ட நாளைய ஆசை சீனுவை விழுங்கி விட வேண்டு மென்பதுதான். இந்த ஆசையை எப்படியும் முற்றுவிப்பது வரையிலும் அது சும்மா விருக்கப் போவதில்லை. எனவே யுத்தத்திற்குப் போதுமான காரணமோ சந்தர்ப்பமோ நிகழ வேண்டாம். இவ்வாரம் நமக்குக் கிடைத்த தகவலால், ஜப்பான், மனித ரத்தம் ஓடும் எவனும் ஒப்புக் கொள்ளாத மாதிரியான சில நிபந்தனைகளை வேண்டிற்று என்றும், நிர்க்கதியான சீனு அவற்றில் இரண்டுக்கு உடன் இணங்கிவிட்டது என்றும் தெரிகிறது. ஜப்பானியர் விருப்

பப்படி மிகுந்த செல்வாக்கும் செயல் திறமும் மதிநுட்பமுமுடைய சாகார் மாகாண சீன கவர்னர் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டு விட்டார். ராணுவங்கள் யாவும் இருந்த விடங்களை விட்டு வேறு பக்கங்கட்கு அனுப்பப்பட்டு விட்டன. இவ்விரண்டும் நடைபெற்ற பிறகும் ஜப்பான் வெறி அடங்கிய பாடில்லை. அதன் ஒரு பெரிய சேனை--சுமார் எண்பத்தைந்து ஆயிரம் எண்ணிக்கை கொண்ட படை—சீன எல்லைப் புறத்தில் பாளைய மிட்டிருக்கிறது. அதுகண்டு சீனர்கள் ஸிம்ஹசொப்னம் கண்டவர்போல் நடுநடுங்குகின்றனர். பலர் பெரிய நகரங்களை விட்டு கிராமங்கட்கு ஓடி விட்டார்கள்; எல்லோரும் "இன்று வரும் ஜப்பான் விமானப்படை; நாளை வீழும் விஷப்புகை குண்டுகள்" என்று பேசிக் கொள்கிறார்கள். ஆம்—போர்க் காயம் ஆறி வருடமொன்றாகுமுன்பு மீண்டும் யுத்தம் வருவதென்றால் யார்தான் பயப்பட மாட்டார்கள்!

லண்டனிலிருக்கும் சீன ஸ்தானீகர் சர்வதேச சங்கத்தின் கவனத்தை இழுத்து ஒன்பது தேச வல்லரசுகள் ஒப்பந்தத்தை உலகிற்கு ஞாபக மூட்டுகின்றார். இவ்வொப்பந்தம் 1922-ல் செய்யப்பெற்றது. அதில் சீனாவின் சுயேச்சை, அந்தஸ்து ஆகியவற்றிற்குப் பாதகமாக எதுவும் செய்யக்கூடாது என்ற நிபந்தனைகளிருக்கின்றன. அந்நிபந்தனைகளை சம்மதித்து கையெழுத்திட்ட தேசங்களில் ஜப்பானும் ஒன்றாகும். இந்த லக்ஷணத்தில் ஸ்தானீகர் வேண்டுதலால் என்ன நடைபெறப் போகிறதென்பது நமக்கு விளங்கவில்லை. சர்வதேச சங்கம் ஓர் பொம்மை; சக்தியற்ற உருவம்; கொடுமை செய்வார் சிலருக்கு ஒதுங்கும் ஓர் சத்திரமாக இருக்கிறது அது. இந்த உண்மை முன்னைய பழக்கத்தால் சீன ஸ்தானீகருக்குத் தெரிந்திருக்குமென்றே நம்புகிறோம். ஆயினும் அவர் 'ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு' என்ற தர்மப்படி சங்கத்தை நாடுகின்றார் போலும்.

மற்றப் படியாக இதர வல்லரசுகள் வந்து கை கொடுத்து உதவுவார்கள் என்று சீனா எதிர்பார்க்குமாயின் அதுவும் பெரிய தவறே. அமெரிக்கா தனக்குள் குமுறிக் குழம்பி அல்லோலகல்லோலப்பட்டுக் கிடக்கும் பொருளாதார நிலைமையால் வெளியே எதுவும் செய்ய சக்தியற்றிருக்கிறது. இத்தாலி அபிசீனியாவை விழுங்குவதற்காக தன் வாயையும் தொண்டையையும் விஸ்தரிப்பதில் கவனத்தை யெல்லாம் செலுத்தி நிற்கின்றது. ஜெர்மனி தன் புஜங்களைத் திருகிவிடுவதிலும் நாலாபுறமுமிருந்து முறைத்துப் பார்க்கும் வெளிநாட்டார் கண்களைக் கவனிப்பதிலும் கருத்து நாட்டியிருக்கிறது. பிரான்சோ உள்நாட்டு மந்திரி சபை அமைப்பில் பொழுதையெல்லாம் போக்கி எஞ்சியதை ஜர்மனியைக் கவனிப்பதில் செலவிட்டு வருகிறது. பிரிட்டிஷார்கள் வெளிக்கு மீசையை முறுக்குவதல்லாமல் உள்ளூர இரத்தம் நிமிஷத்திற்கு 10 ஆயிரக் கணக்கான மைல் வேகத்தில் ஓடப்பெறுகிறார்கள். அவர்கள் வாயினால் எதுவும் பேசலாமேயன்றி யுத்தத்தில் சிக்கினால் சாயம் துலங்கிவிடப் போவது திண்ணம். அந்த உண்மை அவர்கட்குத் தெரியாததல்ல; எனவே சீனா வெளியிலிருந்து எவ்வளவு தூரம் உதவியைப் பெறக்கூடுமென்பது புரியவில்லை. சுருக்கமாக மேனாட்டுத் தேசங்கள் இந்த சமயத்தில் கீழ் நாட்டைப் பார்க்கப் போவதேயில்லை. இந்த மர்மம் தெரிந்துதான் ஜப்பான் புகைந்தெழுந்திருக்கிறதென்று நாம் நினைக்கின்றோம்.



குவெட்டா பூகம்ப விபத்தில் உயிர் பிழைத்தவர்கட்கு உதவி செய்வது சம்பந்தமாக யோசிக்கும் பொருட்டு பாபு ராஜேந்திரப் பிரசாத், காங்கிரஸ் பொதுக் காரியதரிசிகள் சிந்து தலைவர்கள் ஆகியவர்களின் அழைப்புக் கிணங்க தம் மத்திய மாகாண சுற்றுப் பிரயாணத்தை ஒத்தி வைத்துவிட்டு கராச்சிக்கு விரைந்து சென்றார். வழியில் சர்தார் படேலுடனும் பம்பாய்த் தலைவர்களுடனும் கலந்து என்ன செய்வதென்று யோசித்தார். பாபு ராஜேந்திரர் பம்பாயில் இறங்கியபோது மேயர் நரிமானும் மற்ற காங்கிரஸ் தலைவர்களும் வரவேற்றார்கள். —Cou.



எவ்வழியானும் சீனாவை 'அடித்து' விடுவதென்று உறுதி கொண்டிருக்கும் நிலைமையில், ஜப்பான் போனமுறை மஞ்சுகோவை கீறி யெடுத்ததுபோல இம்முறை வட சீனத்தைக் பகிர்ந்து கொள்ளாமல் விடாது. இந்தக் கொடிய ஆசையை இதர வல்லரசுகட்குக் கேட்க நாவுண்டா? இத்தாலி அபிசீனியாவைப் பெற்று பெரும் சாம்ராஜ்யத்தை நிலைநாட்ட முயல்கையில், பிரான்ஸ் முதலியன ஏற்கெனவே தனித்தனி சாம்ராஜ்யங்களைப் பெற்றிருக்கையில், பிரிட்டிஷ் புண்ணியவான்கள், இந்தியா எவ்வளவு சூடு போட்டாலும் விட மாட்டோமென்று பெரும் சாம்ராஜ்யத்தைக் கட்டியாள நினைக்கையில் ஏன் ஜப்பானும் தனக்குச் சொந்தமாக வொன்றைக் கட்டியழக் கூடாது? இக்கேள்வியை ஜப்பான் இதர அரசுகளைப் பார்த்துக் கேளாதோ?

—

## இடி முழக்கம்

### ஸ்ரீ தாஸ் ஞாபக சின்னம்

இம் மாதம் (ஜூன்) 16-ந் தேதி தேசபந்து சித்த ரஞ்சனதாசரின் 10-வது சிரார்த்தவிழா நடை பெற்றது. தேசபக்த திலகமாகிய அன்னார் காலஞ் சென்று 10 வருடம் ஆகிவிட்டாலும் நேற்று நடைபெற்றது போலிருக்கின்றது அவரது அரும்பணி. அவரது அரிய தியாகம், உயரிய மதி, பெரிய தயாளம் முதலியன இந்தியாவின் மேலான பொக்கிஷங்களாம். அவற்றை நம் ஞாபகத்தில் குவித்து வைப்பதற்காக கல்கத்தா கஜாகூர் மயானத்தில் வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டியின் உழைப்பினால் கோபுரம் போன்ற ஒரு சின்னம் கட்டப்பட்டிருக்கிறது. அதன் உயரம் 55 முழம். ஒவ்வொரு முழமும் ஸ்ரீ தாசின் வாழ்க்கையின் ஒவ்வொரு ஆண்டையும் குறிப்பிடுகிறது. அக்கோபுரத்தின் உச்சியில் ஒரு குடிசையின் வடிவத்தை அமைத்து, தேச பந்துவுக்கு கிராமாபிவிருத்தியிலிருந்த ஆர்வத்தைச் சித்தரித்திருக்கிறார்கள். இந்த ஞாபக சின்னத்திற்கான மொத்தச் செலவு 45 ஆயிரம். இவ்வாறு வங்காளம் தன் அபிமானத்தைக் காட்டியிருக்கின்றதென்றாலும் ஸ்ரீ தாஸ் ஆற்றிய தொண்டின் கோடான கோடிக்கே இது தகுதியாகும். ஸ்ரீ தாசர் நாமம் வாழ்க!

### நெடுநேரம் பேசியதற்கு சிறை

பாத்வான் போலீஸ் சூப்பரிண்டெண்டினால் டாக்டர் சாரு சந்திர பானர்ஜி, ஸ்ரீமதி விமலா பிரதீப தேவி என்ற தம்பதிகள் அசன்சால் சிறையில் அடைக்கப்பட்டனர். காரணம் அவர்களது புதல்வர்களுடன் சிறையில் நீண்ட நேரம் பேசிவிட்டார்கள் என்பதுதான். டாக்டர் பானர்ஜியின் புதல்வர்களாகிய திலீபன், சுசீலன் என்ற இருவர் விசாரணை செய்யப்படாத கைதிகளாக அசன்சால் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். பெற்ற மனம் குழந்தையென்றால் உருகாதா? பெற்றோர் சர்க்கார் உத்தரவு பெற்று சிறையில் புதல்வர்களைக் கண்டு பேசினார்கள். அப்பேச்சு, குறிப்பிட்ட நேரத்தைவிட சற்று நீண்டுவிட்டதாம். உடன் போலீஸ் சூப்பரிண்டெண்டு பெற்றோரையும் ஜெயிலிலடைக்க உத்தரவு கொடுத்து விட்டார்.

பெற்றோர்கள் சிறையிலிருக்கும் தம் சொந்த இரு குழந்தைகளுடன் ஆசை மிகுதியால் அதிக நேரம் பேசி விடுவதும்கூட இந்தத் தேசத்தில் சட்ட விரோதமா? விசாரணையின்றி சிறையில் வைத்திருப்பதை விட எவ்வழியில் அப்பெற்றோர் தப்பு செய்துவிட்டனர்?

### குவெட்டாவில் இறந்தவர் 1000 பேர்தானா?

இந்தியாவில் நடைபெறும் அழிவுகளை மிகக் குறைத்து உலகத்திற்குச் சொல்வது இங்கிலாந்தின் வழக்கம். இந்திய சர்க்காருக்கு இங்கிலாந்துக்கு அதனை குறைத்துச் சொல்வது சுபாவம். இந்த இரு தன்மைகளும் நெடுநாளாக நடந்து வருகின்றன. சமீபத்தில் குவெட்டாவில் பூகம்ப மேற்பட்டபோது இந்தியாவிலிருந்து ஆயிரம் பேரே இறந்து போனார்கள் என்று இந்தியா மந்திரிக்கு செய்தி அனுப்பப்பட்டதாம். உண்மையில் இறந்தவர் தொகை 56000 என்பது நேயர்கட்குத் தெரியும். இவ்வாறு இந்தியர் அழிவைக் குறைத்துச் சொல்வதற்கு இந்தியர் மீதுள்ள இரக்கம் காரணமா? அல்லது ஆயிரமும், 56 ஆயிரமும் ஒன்றாகத் தோன்றும் கண் மறைந்த அகந்தை காரணமா?

## ஜஸ்டிஸ் தெரிந்த உண்மை

### தலை தூக்க யோசனை

"எவ்வழியிலும் காங்கிரசை நசுக்குக. முளையிலேயே அதன் செயல்களை அழித்து விடாவிட்டால், அது பிறகு ஜஸ்டிஸ் கட்சியை தேர்தலில் விழுங்கி விடும். உத்தியோகங்களையும் எடுத்துக் கொள்ளும்"

இப்படித்தான் பேசிக்கொண்டார்கள் 15-ந் தேதி கோயமுத்தூரில் தம் கக்ஷி உத்தாரணத்தின் பொருட்டுக் கூடிய எல்லா ஜஸ்டிஸ் தலைவர்களும். பல தலைவர்கள் பல மாதிரி கருத்துக்களை வழங்கி கட்சியைப் பலப்படுத்தும் யோசனை சொன்னார்கள்.

சிலர் குமாரராஜாவை கட்சியிலிருந்து தூக்கி வேறு கட்சி ஸ்தாபித்துக் கொள்ளும் படியாக விட்டுவைத்தது தவறு என்று சொன்னார்கள். சிலர் எப்படியும் எல்லா பிரிவுபட்டாரையும் ஒன்று சேர்த்து கட்சியைப் பலப்படுத்தவேண்டுமென்று கூறினார்கள். கோயமுத்தூரில் சுயேச்சைக் கட்சியார், ஐக்கிய தேசிய கட்சி, ஜஸ்டிஸ் ஜன நாயகக் கட்சி ஆகிய மூன்றையும் இணைக்கும் ஒரு பெரிய திட்டம் போடப்பட்டது.

அதே வேளையில் காங்கிரசை எவ்வளவு கூடுமோ அவ்வளவு தாக்குவதென்றும் நிச்சயித்தார்கள்.

—ஒரு நிருபர்.

## ஊழியன் சந்தா.

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ | 6-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3-0-0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10-0-0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 5-0-0 |

காரியஸ்தர்,

ஊழியன் ஆபீஸ்,

56, தம்புசெட்டித் தெரு,

சென்னை.

## மகமத் நபியின் சில அருண் மொழிகள்

(1) தெய்வீக நற்குணங்கள் உங்களிடம் ஊறி நிற்க.

(2) உலகில் எப்பொருளும் ஒப்பஞ் செய்யப்பட வேண்டும். இருதயத்தை ஒப்பஞ் செய்வதற்கு கடவுள் தியானம் தேவை.

(3) கடவுளை நாட எவன் விழைகின்றானோ அவனைக் கடவுள் நாடுவார்.

(4) செயல்கள் யாவும் உத்தேசத்திற்கொத்த வண்ணமே மதிக்கப்படும்.

(5) இன்ப உலகு உன் தாயின் காலடியில் இருக்கிறது.

(6) நானும் தாய்தந்தையற்றோரின் ரக்ஷகரும் மறுஉலகில் ஒரு இடத்தில் எனது இருவிரல்கள் ஒன்றாகத் தோட்டிருப்பது போல் இருப்போம்.

(7) தம் சிறுவர்களிடம் அன்பு செலுத்தாமலும் முதியோரைப் பூஜியாமலு மிருக்கிறவர்கள் நம்மை சேர்ந்தவர்களல்லர்.

(8) கற்பும் அடக்கமும் இஸ்லாமின் பகுதிகளாகும்.

(9) தன்னலத்தைக் கொல்வதே மாபெரும் ஜெஹாட் (தர்ம யுத்தம்.)

(10) எப்போதும் ஆநந்தத்தை வெட்டி வீழ்த்தி அழிப்பவனாகிய காலனை (மாணத்தை) நினைத்துக் கொள்க.

(11) உடம்போடு மனம் ஒன்றாத ஸ்தோத்திரத்தை கடவுள் ஒரு போதும் பொருட்படுத்த மாட்டார்.

(12) அறிவைத் திரட்டிப் பொக்கிஷமாக்குவது எல்லா இஸ்லாம் ஆண் பெண்களுடையவும் தோன்றாக் கடமையாகும்.

(13) பக்தனுடைய பிரார்த்தனை ரக்ஷகரோடு அவனை நெருங்கவிடும்.

(14) பொறுமையும் சந்தேகமும் சமூகத்தைக் குறைப்படுத்துகின்றன.

(15) உலகமும் அதில் காணும் எல்லா பொருட்களும் மதிப்புடையவை. ஆனால் நற்குணமுடைய ஒரு ஜீவன் மிகப்பெரிய மதிப்புடையது.

(16) சந்தோஷமுடன் நண்பர்களை சந்திப்பது தர்மமான ஓர் காரியம்.

(17) எந்த தந்தையும் தம் குழந்தைகட்கு நல்லொழுக்கத்தைவிட மேன்மையான தெதனையும் கொடுத்துவிட முடியாது.

## ரங்கூன் மார்க்கட் நிலவரம்

ரங்கூன், ஜூன் 18.

| | |
|---|---|
| படகு நெல் | 99/100 |
| ரயில் நெல் | 89/110 |
| பெரிய மில்லரிசி ஸ்பெஷல் | 234 |
| நசேன் சிறிய மில்லரிசி | 245/247-8 |
| நசேன் எஸ். க்யூ | 252-8/ |
| மீடான் பஜார் | 260/ |
| மீடான் எஸ். க்யூ— | 270/ |
| ரெடி புழுங்கல் அரிசி | 257-8/267-8 |
| மில்சார் | 255/267-8/ |
| முழுப் புழுங்கல் | 245/252-8/ |
| யதெலெ | 265/275/ |

### ரப்பர்

லண்டன், ஜூன் 18௳

லண்டன் ஷீட் ஸ்பாட் ரப்பர் விலை

வாங்குவோர் பவுன் 1-க்கு 6 1/16 பென்ஸ்.

விற்பவர் 6 1/8 பென்ஸ்.

## கப்பல்

— ரங்கூன் —

எதியோப்பியா:—24-ந் தேதி வந்து 28-ந் தேதி புறப்படும்.

எரின்புரா:—ஜூலை 1-ந் தேதி வந்து 5-ந் தேதி புறப்படும்.

வெள்ளிக்கிழமை தோறும் ரங்கூனுக்கு மெயில் கொண்டு போகப்படும்.

## நேயர்காள்!

பத்திரிகையில் காணும் விளம்பரப்படி சாமான் கட்கு ஆர்டர் கொடுக்கும் போது தயவு செய்து 'ஊழியன்' பெயரை குறிப்பிட மறந்து விட வேண்டாம்.



# ருஷ்ய தீர்க்கதரிசி டால்ஸ்டாய்

## அவரது அருங்குணங்களும் பெருமையும்

சில வாரங்கட்கு முன்பு "ஊழியனி"ல் ருஷ்ய ஞானியாகிய டால்ஸ்டாயின் மண வாழ்க்கையைப் பற்றி எழுதப் பட்டிருந்தது. இன்று அவரது அரும்பெருங் குணங்களும் மாகாத்மியமும் பொறிக்கப்படுகின்றன. அவரது சிறப்புக்களை எண்ணில், அவற்றை எத்தனை தரம் படித்தாலும் தகும். ஆதல்பற்றியே பற்பலர் அவரைப் பற்றி பற்பல புத்தகங்கள் வரைந்து குவிக்கின்றனர். இந்தக் கட்டுரை கொரால்டு ஆப்ராஹாம் என்பவர் எழுதிய 'டால்ஸ்டாய்' என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்படுகிறது.

டால்ஸ்டாய் ஓர் மாபெரும் புருஷ சிரேஷ்டர் என்பதை எவரும் மறுக்க மாட்டார்கள். எனினும் "அவர் என்ன மாதிரி பெரிய மனிதர்?" சிலர் கேட்கலாம். இந்தக் கேள்விக்குப் பற்பலர் பலப்பல விடைகளை அளிக்கக்கூடும். சிலர் "அவர் ஓர் பெரிய நூலாசிரியர்" என்று நுவலலாம். சிலர் "அவர் ஓர் தீர்க்கதர்சி" என்று சொல்லலாம். வேறு சிலர் "அவர் ஓர் புரட்சிக்காரர்" என்று புகலலாம். இன்னுஞ் சிலர் "அவர் ஓர் சிறந்த ஒழுக்கமுடையவர்" என்று ஓதலாம். யோசித்துப் பார்த்தால் இவ் எல்லா விடைகளும் ஏற்றுக் கொள்ளத் தகுந்தனவாகும்.

டால்டாயின் ஒழுக்க வரையறுப்புகளை ஆராயுமிடத்து, "அவைகள் எல்லாம் உலக வாழ்க்கை முறையோடு ஒப்பிட்டால் அனுஷ்டான சாத்யமல்ல" என்று சிலர் செப்புவார்கள். அப்படியாயின், இயேசுநாதர் இயம்பிய நீதி நெறிகளும் அனுஷ்டான சாத்தியமல்லாதவைகளே.

டால்ஸ்டாய், புரட்சி எந்த வழியில் உருப்பெற்றுத் தோற்ற வேண்டுமென்று ஒருபோதும் கூறியதில்லை. அப்படித்தான் புரட்சியைப் போதித்த எல்லா புரட்சிக்காரர்களும் சொல்லியிருக்கிறார்கள். உதாரணமாக 19 ம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பிரான்சில் புரட்சியைத் தோற்றுவித்த நூலாசிரியர் ரூசோவை எடுத்துப் பாருங்கள். அவர் ஒரு குறிப்பிட்ட ஸ்தாபனத்தின் மீது பொதுவான வெறுப்பை உண்டு பண்ணி, அதனை அழிக்கும்முறை புரட்சியென்று கூறினாரே யல்லாது, எந்தவிதமான புரட்சியை எழுப்ப வேண்டுமென்று சொன்னாரில்லை.



பினாங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்க இரண்டாவது ஆண்டுவிழாத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் மெ. ராம. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள், கண்டனூர் வாசியாகிய இவருக்கு வயது ஐம்பத்து எட்டு. ஊக்கமுடன் தொண்டாற்றுகிறார்.

* * *

டால்ஸ்டாய் எந்த எந்த சம்பவங்களைப்பற்றி தீர்க்க தர்சனம் கூறினாரோ அவைகளெல்லாம் அப்படி யப்படியே நடந்திருக்கின்றன. ஜார் ஆட்சியையும் ருஷ்யத் தேவாலயங்களையும் பற்றிக் குறி சொன்னார். இரண்டும் அப்படியே அழிந்தபட்டன. கொடுங்கோன்மை மறைந்து சர்வாதிகாரத் தன்மை ஆட்சி புரியுமென்றார். அதேபோல ஜாரின் குடும்பம் அடியுடன் வீழ்ந்து, பொதுவுடமை சர்வாதிகார ஆட்சி தலையெடுத்தது. ஜனநாயக அரசியல் ருஷ்யர்கட்கிடையில் ஒருபோதும் ஒழுங்காக நடைபெறாது என்று அவர் நம்பினார். அவ்வண்ணமே ஜன நாயக ஆட்சி ஏற்பட்டும் பார்க்கப்படவில்லை. ருஷ்யர்கள் ஒத்துக்கொள்ளும் மனப்பான்மையும் இலேசுலேசாக மாற்றங்களைக் கைக்கொள்ளும் இயல்பும் அற்றவர்கள். இந்தத் தன்மையை உணர்ந்ததாலேயே டால்ஸ்டாய் ஜனநாயக ஆட்சி தழைக்காது என்று கூறினார்.

டால்ஸ்டாய்க்கு எங்கெங்கத் திசைகளிலிருந்து மாற்றம் தெரித்துக் கொண்டு வரும் என்பது நன்கு தெரியும்.

* * *

டால்ஸ்டாய் பெரிய நூலாசிரியர் என்பதற்கு இரண்டபிப் பிராயமே கிடையாது. அவர் ஓர் பரிபூரணத்துமுடைய நாவலாசிரியரோ நாடகாசிரியரோவல்ல. இயற்கை அன்னை எப்படித் தோற்றுகின்றாளோ அதுபோல விருந்தன அவரது நூல்களும். இயற்கையில் மிகுந்த நல்ல காட்சியின் ஓரத்தில் மிக ஆபாசமான தோற்றங்கள் அமைந்திருப்பது இயல்பு. நேப்பில்ஸ் என்ற நிகரிலா ரமணீய கடலோரத்தின் சமீபத்தில், பன்முறை அழிவுப் பயிற்சி பெற்றதும் சதா புகையையும் உருகிய கற்களையும் வெளிவிட்டுக் கொண்டிருப்பதுமாகிய பெரிய எரிமலையைக் காண்கின்றோம். அதேபோன்று, டால்டாயும் அழகு வழியும் வர்ணனைகளின் சமீபத்திலும் மிக உத்தமமான பண்புகளின் அருகிலும் சர்வ மட்டமானதும் கீழ்த்தரமானதுமான பாத்திரங்களை எழுதிக் காட்டுவார்.

'அன்னா'கரினினா என்ற நாவலில் இரண்டு தனிப்பட்ட கதைகள் அடங்கியுள. அவ்விரண்டும் தந்திரமாகச் சேர்க்கப்பட்டிருக்கவில்லை. அதில் அன்னா

2

வின் கதி துன்பகாமாய் முடிவதாய் தெரியமுடியாது. அன்று தரித்திர மிகுதியால் அவதிப்பட்டு கடைசியில் ஒரு அதிகாரியை மணந்து, ஒரு ஏழையைகாதலனாக வைத்துக் கொண்டாளென்று நினைத்தாலல்லாது எந்தவிதமான துக்க முடிவையும் காணமாட்டோம். மேற் குறித்தவாறு நினைத்தாலும் கூட துன்பகாமான முடிவுக்குள்ள முக்கிய லக்ஷணங்கள் யாவும் அதில் உண்டு என்று சொல்லிவிட முடியாது.

டால்ஸ்டாயின் நூல்கள் முழுதும் தனித்தனியே அழகு பெற்றுள்ளவையே தவிர மொத்தமாக வனப்புடையவை யன்று. அவைகளை டால்ஸ்டாயின் பெருங் குணங்கள் தோற்றும் கண்ணாடி என்று தான் சொல்லலாம்; அன்றி அரிய நூல்களை யென்றும் சொல்லிவிட முடியாது.

உண்மையில் டால்ஸ்டாயின் பெருமை அவரது சுபாவத்திலும் வாழ்க்கையிலுமே காணக்கிடக்கின்றது. எதையும் அவர் பெரிய அளவில் செய்து காண்பிப்பதுதான் இயற்கை. மற்ற மனிதர்களோடு அவரை ஒப்பிட்டால் ஒரு அபார உணர்ச்சி படைத்தவரென்று கூறியாகவேண்டும். அவர் ஒரு தப்பிதம் செய்தால் அதுவும் ஹிமாலயம் போலவே தோற்றும். தன்னை வெறுத்தல், வள்ளன்மை, வெறுப்பு முதலிய குணங்களும் மலையளவினவே. சுருக்கத்தில் அவரைப் போல் ஒரு மனித உலக சரித்திரத்தில் காண்பது கஷ்டம்.

சாதாரணமாக டால்ஸ்டாயைப் பற்றி எழுதுபவர்களெல்லாம் அவரை ஓர் ஞானியென்றோ அல்லது அவரது மனைவியை யொரு பிடாரி என்றோ குறிப்பிட்டு விடுவது இயல்பு. சிலர் டால்ஸ்டாயை ஓர் உணர்ச்சியற்ற கணவர் என்றும் மனைவியை நயமறியா மங்கை யென்றும் சொல்கிறார்கள். ஆப்ரகாம் என்பவர் எழுதிய ஒரு புத்தகத்தில் நடந்தவைகளை அப்படியே கூறிவிட்டு வாசகர்களை யோசித்து யார் தப்புச் செய்பவர் என்று கண்டுபிடித்துக் கொள்ளுமாறு விட்டு விடுகிறார். உண்மையில் டால்ஸ்டாய் புருஷனென்ற முறையில் மிக கெட்டவரே.

குழந்தைகளைப் பெறுமுன்பு அவர் மனைவியோடு நிரம்ப பொருந்தா முறையில் நடந்துகொள்வார். விசேஷமாகவும் பிந்திய மாதங்களில் நிரம்ப முரணுவார். ஒரு தடவை பிரமாதமாக சண்டை போட்டுக்கொண்டு பொறுமையிழந்து "நான் எங்காவது வெளியே செல்கிறேன். அமெரிக்காதான் ஏற்ற விடம். இனி திரும்புவதே இல்லை" என்று கூறிக்கொண்டு மூட்டை கட்டினார். மனைவி எவ்வளவோ கெஞ்சியும் கோபம் தாழவில்லையாம்.

ஒரு தடவை அவருக்கும் மனைவிக்கும் நடைபெற்ற சண்டையைப்பற்றி மனைவியார் இவ்வாறு எழுதியிருக்கின்றார் :—

........காலை 5-மணி வரை திரும்பி வரவே இல்லை. உடன் நான் கீழ் மாடிக்கு இறங்கி வந்தேன். அங்கு டால்ஸ்டாய் கோபத்தோடும் முக வாட்டத்தோடும்உட்கார்ந்திருந்தார். "இதோ பாருங்கள். எனக்கு நிரம்ப வேதனையா யிருக்கிறது. கொஞ்ச நேரத்தில் குழந்தை பிறக்கும். நீங்கள் ஏன் கோபத்தோடிருக்கிறீர்கள்? நான் ஏதேனும் தவறிழைத்தால் மன்னித்து விடுங்கள். பெரும்பாலும் இன்று நானிறந்துவிடுவேன். இவ்வாறு நான் கூறியதும் அவர் திரும்பி என்னையே கூர்ந்து பார்த்தார். ஒரு வார்த்தையேனும் கூறவில்லை. உடன் நான் போய்விட்டேன். ஒரு மணி நேரம் சென்றதும் சாஷா பிறந்தது.

டால்ஸ்டாய்க்கு தான் அரச வம்சத்தைச் சேர்ந்திருப்பதிலும் தனவந்தனயிருப்பதிலும் நிரம்ப வருத்தம். தம் வாழ்க்கைக்காக வேலை செய்யும்படி வற்புறுத்தப் பட்டிருந்தால் அவர் நிரம்ப சந்தோஷமுடைய மனிதராக விருந்திருப்பார் போலும். நிராதாவாகவும் நிர்க்கதியாகவு மிருந்த ஏழைக் குடிகளின்—வீடில்லாமலு மிருந்த தொழிலாளிகளின் உழைப்பில்—காலந்தள்ளவேண்டி யிருந்ததற்காக சாலவும் வருத்தம் கொண்டார். என்றாலும் குடும்பத்தைவிட்டும் ஆஸ்தியை விட்டும் நீங்கியிருக்க முடியவில்லை.

விவிலியத்தில் ஒரு பணக்கார வாலிபன், இயேசுநாதரின் உபதேசங்கட்குத் தன்னை சீர்திருத்திக்கொண்டு வாழ முடியாததால் வருத்தத்துடன் செல்வதாகக் காண்கிறோம். அவனுக்கு "உனக்கிருப்பதெல்லா வற்றையும் விற்றுவிட்டு





என்னைத் தொடர்ந்துவா" என்று மறுமொழி கூறப்பட்டது. இந்த மறுமொழி டால்ஸ்டாய்க்குப் பொருத்தமானதாகத் தோன்றும். அவர் சிறுவயது முதல்—ஜாரின் ராணுவத்தில் வேலையிலிருந்த போதுங்கூட—"நான் காப்பாற்றப் படுவதற்கு என்னவேண்டும்?" என்று கேட்பார். இந்த கேள்வியையே தலைப்பாகக் கொடுத்து ஒரு வியாசமெழுதி யிருக்கிறார். மேற்படி கேள்விக்கு எல்லாவற்றையும் முற்றிலும் துறந்துவிடவேண்டு மென்பதைத் தவிர வேறு விடை சொல்ல முடியாது. அதனையே அவரும் சொன்னார். சில கால் அக் கருத்தோடு அவர் மனைவியின் அறையில் உட்கார்ந்துகொண்டு செருப்புத் தைப்பார்; சில்கால் மண் வெட்டவும் உழவும் செய்வார். ஒரு பெரிய பிரபு—லக்ஷக்கணக்காக ஆஸ்தியுடையவர்—மேற்குறித்தவாறு வேலை செய்வதைக் கண்டால் சிரிக்காமலிருக்க முடியாது. அவர் எதைச் சொல்கிறாரோ அதை செய்ய முடியாமலிருப்பது வேடிக்கையே.

மாக்ஸிம் கார்கி என்ற பெரிய ருஷ்ய ஆசிரியர் டால்ஸ்டாயை நேரில் அறிவார். அவர் டால்ஸ்டாயைப் பற்றி எழுதும்போது அடியில் வருமாறு சுருக்கி எழுதினார்:—

நான் டால்ஸ்டாயிடம் கண்ட ஒரு பெரிய காட்சி, எல்லோராலும் வெறுக்கப்படும் ஒரு பிரபுத் தன்மையிலிருந்து, தன்னை, நாமெல்லாம் விரும்பும் ஒரு தந்தையின் நிலைமைக்கு மாற்றுவதற்கு மிருந்த உறுதிப்பாட்டுடன் செய்து கொண்ட முயற்சியாகும்.

ஒரு பெரிய ஞானியாக வேண்டுமென்ற அவரது பெரிய சிரமத்தை எந்த மனிதனும் பாராட்டாமலிருக்க முடியாது. இறுதியில் அவர், குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய கடமைகட்கிடையிலும் மக்கட்கு ஆற்ற வேண்டிய தொண்டுகட்கிடையிலும் பிய்க்கப்பட்டார். இந்த இரண்டில் ஏதாவது ஒன்றை மட்டிலும் பற்றி யிருந்தாரானால் அவருக்கும் நமக்கும்—விசேஷமாக அவர் மனைவிக்கும்—பிரயோஜனகாமா யிருந்திருக்கும். ஆனால் அப்படி செய்ய அவரால் முடியவில்லை. ஆதலாலேயே நாம் பெரிய வேடிக்கையாக அவரைப் பற்றிப் படிக்கிறோம். எவ்வழியிலும் அவர் இன்று எண்ணுவார் சிந்தைக்கு அணியாயிலங்குகின்றார்.

---

சிறுகூடற்பட்டி

"பார்தமாதா வாசகசாலை"

முதலாவது ஆண்டு விழா

---

இவ் வாசகசாலையின் முதலாவது ஆண்டு விழா நிகழும் யுவ ஆண்டு ஆனித்திங்கள் 8-ந் நாள் (22—6—35) சனிக்கிழமை பிற்பகல் 3-30 மணி முதல் கானைக்குடி சொ. முருகப்பா அவர்கள் தலைமையில் நடைபெறும். அவ்வமயம் அறிஞர் பலர் சொற்பொழிவாற்றுவார்கள் என்று மேற்படி வாசகசாலையார் அறிவிக்கிறார்கள்.

# "பக்த நந்தனார்"

—(o)—

## ஸ்ரீமதி சுந்தராம்பாளின் தளர்ச்சி தரும் பாட்டு

—(o)—

அசன்தாஸ் கிளாசிகல் டாக்கிசாரால் மூன்று லட்சத்திற்குமேல் செலவிடப்பட்டு மூன்று மாதம் கடுமையாக வேலை செய்யப்பப்பட்ட 'பக்த நந்தனார்' என்ற படம் சீக்கிரத்தில் சென்னையில் வெளியாகுமென்று தெரிகிறது. அதற்கு பிரமாதமான ஆரம்ப தினமொன்றை நடாத்த வேண்டுமென்று மிஸ்டர் ஓம்லாவ் கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வந்துள்ளார். நெடுநாள் தமிழ் நாட்டாரால் எதிர்பார்க்கப் பட்டுவரும் ஸ்ரீமதி கெ. பி. சுந்தராம்பாளும் மகாராஜபுரம் திரு. விஸ்வநாத ஐயரும் நடிக்கும் இப்படம் தமிழ் நாட்டாருக்கு குதூகல மளிக்கலாம்.

திரு. விஸ்வநாத ஐயர் பெயரெடுத்த ஒரு சங்கீத ஞானி. முதன் முதலில் இந்தப் படத்தில்தான் நடிக்கிறார். ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாளோ தமிழ் நாட்டாருக்குத் தெரியாதவரல்ல. அவர் சங்கீத மழை பொழியும் ஒரு முகில், சிறந்த நடிகை; தேர்ந்த நாடக அறிவாளி. இன்று தமிழ் நாடக உலகில் முதன்மைபெற்று நிற்பவர் அவரே.

படத்தின் டயரக்டராக விருப்பவர் மிஸ்டர் எம். எல். தாண்டன். இவர் சமீபத்தில் ஹாலிவுட் சென்று பயிற்சி பெற்று வந்தாரென்பது இந்தியருக்குத் தெரியும். இந்த பக்த நந்தனாரை அவர் நன்றாகப் படித்து உணர்ந்து நடாத்தியிருக்கிறார்.

"மிஸ்டர் ஓமலாவ் கூறுவதாவது:— பக்த நந்தனாரில் ஆக்டு செய்த அனைவரும்—அதாவது முக்கியமான நடிகர் முதல் வேலைக்காரனாக வருபவர் வரையிலும்—போட்டிபோட்டு அக்கதையை முதல் தரமானதாக்க முயன்றிருக்கின்றார்கள். இந்தப்படத்தை அடைய, இந்தியா பெருமை கொள்ளலாம். எல்லா ஆக்டர்களிலும் ஸ்ரீமதி சுந்தராம்பாளே நிரம்ப கவனம் செலுத்தியிருக்கிறார். அவர் பாடும் பாட்டு கேட்போனை தாம் இருக்கு மிடத்திலிருந்து மெய்ம் மறந்த சங்கீத உலகிற்கு எடுத்துச்சென்றுவிடும். நான் இந்தியாவிலோ ஹாலிவுட்டிலோ ஸ்ரீமதி சுந்தராம்பாளைப் போல் முற்றிலும் தன் வேஷத்திலேயே லயமாகி நடிக்கும் ஒருவரைப் பார்த்ததில்லை. சில இடங்களில் நந்தன் கடவுள் பக்தியால் பாடிவிட்டு மூர்ச்சையாகும் சம்பவம் எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. டயரக்டர் நிறுத்தும்படி சத்தம் போட்டும், காமிரா நின்றும்கூட நந்தன் எழுந்திருக்கின்றானில்லை. நெருங்கிப் பார்த்த பிறகு, ஸ்ரீமதி சுந்தராம்பாள் பாடிய பாட்டு அவ்வளவு தளர்ச்சியைக் கொடுத்தது என்றும். அதனாலேயே மூர்ச்சையாகி விழுந்து விடுகிறாரென்றும் அறிந்தோம், மற்றொரு காட்சியில் அவர் ஒரு மரத்தில் கட்டிவைக்கப்பட்டு அடிக்கப்படும் போது, அவரது தைரியமும் துணிச்சலும் நம்மை மயக்கிவிடுகின்றன. முகத்திலும் உடம்பிலும் அடிமேல் அடியாக கொக்கப்படுவது உண்மையில் தழும்பை உண்டுபண்ணி விடுகின்றது. எனினும் ஸ்ரீமதி சுந்தராம்பாள் அமைதியாக கடவுள் ஸ்தோத்திரத்தில் ஈடுபட்டு சாந்தமாய் நிற்கிறார். காமிராவண்டை நின்று பார்க்கும் நமக்கு அவர்படும் அடிகளைக் கண்டால் அனுதாபப் பெருக்கெடுத்து விடும்"

திரு. தாண்டன் நந்தனாரில் தம் முழு சாமர்த்தியத்தையும் காண்பித்துள்ளார். படத்தின் ஒவ்வொரு பகுதியையும் நன்றாக ஆராய்ச்சிசெய்து தகுந்தபடியான கவனம் அளித்திருக்கிறார்.

மிஸ்டர் ஓமலாவ் ஹாலிவுட்டிலுள்ளவர். சமீபத்தில்தான் இந்தியாவுக்கு வந்தார். அவரோடு மிஸ்டர் டன்கன் என்பவர் வந்திருக்கிறார். இருவரும் திரு. தாண்டனுக்கு சினிமாக் கலை சம்பந்தமான உபதேசங்களை அளித்தார்கள்.










## இராத்திரியில் க்ஷவரம்

அல்லது

## வேலையில்லா திண்டாட்டம்

(எஸ். கே. எஸ்,)

நான் கலாசாலைப் படிப்பு முடிந்ததும் ஸர்டிபிக்கெட் என்னும் ஆயுதத்தை கையிலேந்தி உத்தியோக வேட்டைக்கு புறப்பட்டேன். அரசாங்க அதிகாரிகளின் வீடுதோறும் நடந்து கால்கள் சோர்ந்தன. விண்ணப்பங்கள் எழுதிக் கைகள் தளர்ந்தன. என் பெற்றோர் மகனுக்கு உத்தியோகம் கிடைத்து சுகமாக வாழலாமென்று எண்ணி வாலயமென்றனர்.

ஆனால் மூன்று வருடங்களாகியும் உத்தியோகம் கிடைக்கவில்லை. இந்தக் காலத்தில் உத்தியோகம் கிடைப்பதென்றால் எளிதா? வைசிராய் சிநேகம் வேண்டும்; இன்றேல் கவர்னரைத் தெரியவேண்டும். அல்லது ஒரு சரின் புதல்வனாயிருக்கவேண்டும். அதுமில்லையானால் தகப்பனார் ஒரு எம். எல். சி. யாகவாவது இருக்கவேண்டும். இதைத் தவிர்த்துப் பார்த்தால், என் போன்றோர் பணக்கிழியுடன் ஆபீசுகட்குச் சென்று பார்க்கலாம். அந்த முறை எனக்கு சாத்தியமல்ல. சிற்சிலர் வேறு விதமான கொடைகளைச் செய்து உத்தியோகம் பெறுகின்றனர். அந்த மாதிரி தானம் செய்வதென்றால் நான்—சொன்னவர்களையும் வேறுலகம் புகுத்தி நானும் பின் தொடர்ந்து கொள்வேன். எனில் எனக்கு வேலை கிடைக்குமா?

எனக்கு வயது 24 ஆயிற்று. இன்னும் ஒரு வருடத்தில் உத்தியோகம் கிடைக்கவில்லையென்றால் பின்னர் அரசாங்க வேலை கிடைப்பது முடியாத காரியமாகிவிடும்.

எனவே எப்படியாவது அரசாங்க வேலைபெற வேண்டுமென்ற தீர்மானத்துடன் திருவனந்தபுரத்தில் தங்கலானேன். உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் வீட்டில் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் ஆஜர் கொடுத்து, நான் ஏழை யென்றும், என் தகப்பனார்க்கு ஒரு கால் முடமென்றும், தாயாருக்கு உண்டால் வயிறு நிறையாதென்றும், சகோதரர் நொண்டி யென்றும் என்னென்னவோ கூறி வந்தேன். அதோடு பிற்போக்கான சமூகம், பிராயத்தடை முதலிய காரணங்களையும் எடுத்துரைத்து வந்தேன். என்ன செய்தும் வேலை அமரவில்லை. மூன்று இலாகாக்களில் பெண் பட்டதாரிகள் ஏராளமாயிருக்கையில் ஆண்களுக்கு வேலை கொடுக்க முடியாது என்று தூக்கிவிட்டார்கள். அந்தோ! பெண் கல்வியா என்னை கெடுக்கின்றது?

"பெண்ணாய் பிறந்திருந்தால் இங்கு வில் உத்தியோகம் கிடைத்திருக்குமே" வென்று யோசிக்கலானேன். அம்மம்மா? ஆணைப் பெண்ணுக்கும் விஞ்ஞானிகளிருக்கின்றார்களென்றால் எவ்வளவு பொருத்தமாக விருக்கும்! இவ்வித எண்ணங்கள் இதய மண்டலத்தில் தோன்றவும், உலகமனைத்தும் இருள் மயமாகத் தோன்றிற்று. பட்டம் பெற்ற பின்னர் கட்டம் தீருமென்ற எங்கள் திட்டம் முழு வட்டமாகி விட்டதே!

என் பெருக்கவேண்டும்! கடைசியில் 200 ரூபாய் லஞ்சம் கொடுத்து Age-Bar (வயதுத் தடையை) நீக்கிக் கொள்வதற்காக மூன்று மாதம் ஒரு நீதிமன்றத்தில் காபிஸ்டு வேலை வாங்கினேன். வேலை ஒழுங்காக நடந்தது. நிற்க.

அப்போது எனக்கு வயது 24. நல்ல பக்குவம். கல்யாணமாகவில்லை. எனக்கு வேலை கிடைத்ததும் ஏராளமான பெண்கள் நாடி வந்தனர். நானோ தீவிர சீர்திருத்தவாதி. 'நடத்தினால் காதல் கல்யாணம் நடத்த வேண்டும்; இன்றேல் திருமணமே வேண்டாம்' என்ற கவியைச் சேர்

தவன். ஆதலால் பெற்றோர் கல்யாண விஷயமாக அழுத்தியதும் ஒரு காதலியை எப்படியும் தேடிக் கொள்வதென்று தீர்மானித்தேன்.

ஆனால் காதலியைப் பெறுவது எப்படி?

நான் வழியில் போகும்போதும் வரும்போதும் ஹோட்டலுக்குச் செல்லும்போதும் கோவிலை நாடும்போதும் பெண்கள் பக்கத்தில் கண்ணைச் செலுத்தலானேன். ஆதலால் பல பெண்கள் கண்ணில் விழ்ந்தனர். ஆனால் ஒருவராவது எங்கள் ஆபீசில் டைபிஸ்டாக இருக்கும் காமாக்ஷி என்ற பெண்ணைப்போல் அழகாகத் தோற்றவில்லை.

காமாக்ஷி நல்ல நிறம்; நல்ல பருவம்; நல்லவடிகாரம்; நல்ல உடற்கட்டு. தினசரி ஆபீசுக்கு வரும்போது நாடகக் கொட்டகையில் தோற்றும் நடிகையைப் போல் சிங்காரித்திருப்பாள். கண்களில் மையெழுதி, புருவத்தைத் திருத்தி விட்டு, நிறைய முகப்பொடி போட்டு, தலையில் மயிர்க்கொடி [?] வைத்து நன்றாகக் கட்டி [நிரம்ப] அழகுபடுத்தியிருப்பாள். அவள் வெட்டு, நோட்டம், நடையெல்லாம் எந்தப் பெண்ணையும் ஜெயிப்பதாயிருக்கும். புடவையை கூடியவரை உடம்பில் நன்கு சுற்றி மறைத்திருப்பாள். ஆண்களென்றால் அவள் அடையும் கூச்சம் அசாதாரணமானது. அதைப் பார்த்தால் எனக்கு அளவிட முடியாத வருத்தம் வரும். காரணம் வேஷத்தைப் பார்த்தால் அசல் தாசி மாதிரி! நடையைப் பார்த்தால் பெரிய 'கற்பி' மாதிரி! ஒன்றுக்கொன்று முரணல்லவா?

இருந்தாலும் விடக்கூடாதென்று தேறி நான் அவளையே காதலியாக்கிக் கொள்ளத் தீர்மானித்தேன். அவள் ஒரு B. A; மேலும் உடனிருந்து வேலை பார்ப்பவள் அப்படிப்பட்டவளுடன் காதல் வாழ்க்கை நடத்துவது தானே நிரம்பப் பொருத்தம்?

ஆதலால் காதலைப் பெருக்கிப் பெருக்கி அவள் சிற்சில போழ்தெல்லாம் என்னைப் பார்க்கும் படியான நிலைமைக்குக் கொணர்ந்தேன். ஆனால் என்னைப்போல் காதல் காட்டுவதாக தெரிவித்தாளல்லள்.

இவ்வாறு மூன்று மாதமும் முடிந்த பின், எனது உத்தியோக காலம் முடிவுற்றது. முடிவுற்றதும் நான் ஊருக்குப் போய்விடாது புதிய உத்தியோகம் பார்க்கும் பொருட்டும், காதலை முற்றுவித்தற் பொருட்டும் அவள் தங்கிவந்த வீட்டுக்குப் பக்கத்து வீடு ஒன்றில் தங்கலானேன். அவ்வாறு தங்கியபோது அப் பெண்ணைப் பற்றிய பல விஷயங்கள் தெரியலாயின.

காமாக்ஷியுடன் கிழவனொருவன் மட்டுமே தங்கிவந்தான். அவனைப் பிடித்தால் என் காரியம் சாதிக்கலாமல்லவா? நான் அவனுக்கு இலவச காப்பி வாங்கிக்கொடுத்து, விளையாடி, பொழுது போக்கி, அப்பால் என் உற்ற தோழனாக்கிக் கொண்டேன். பிறகு ஒரு நாள் ஒரு காதற் கடிதத்தை எழுதி காமாக்ஷிக்கு (கிழவன் வழியாக) அனுப்பினேன். கிழவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாதாகையால், என் செயலில் அபாயமுண்டென்று கருதவேண்டாம். அக்கடிதத்தை இங்கு எழுதுவதென்றால் மிக மிக மிகப் பெருகிவிடும்.

* * *





நான் கடிதமெழுதிய மறுநாள் அடியில் வரும் கடிதமொன்றைப் பெற்றேன்:—

கடிதம்

சகோதரரே,

தாங்கள் நெடுநாளாக என்மீது காதல் செலுத்தி வருவதாகக் கூறுவதின் உண்மையை நான் அறிவேன். தாங்கள் ஏமாந்து போக வேண்டுமென்பது என் விருப்பமல்ல. ஆனாலும் நிலைமை மாறி இருப்பதைத் தெரிவிக்க வருத்தப்படுகிறேன். நான் ஏற்கெனவே ஒருவருக்குச் சொந்தமாகி விட்டேன். அந்த நிலையில் உங்களை நினைப்பது ஒழுங்கல்ல.

—அன்புள்ள காமாக்ஷி.

இந்தப் பதிலைக் கண்டதும் ஆச்சரியப்பட்டேன். என்ன! காமாக்ஷி இன்னொருவருக்கு மணம் செய்யப்பட்டிருக்கிறாளா? ஒருவரும் அவளுக்குப் புருஷனிருப்பதாகக் கூறவில்லையே! புருஷனிருந்தால் அவள் வேஷமெல்லாம் இவ்வாறு விகாரமாக இருக்க முடியுமா? மேலும் நான் பக்கத்து வீட்டில் தங்குகிறேன்; ஒரு புருஷனையாவது காணவில்லை; எனினும் புருஷனிருப்பதாகக் கூறுகிறாளே; என்ன ஆச்சரியம்?" என்று நினைத்து அவள் உண்மையைப் பரிசோதிக்க நினைந்தேன். இப்போது நான் அவளது "அன்புள்ள சகோதரனாகி" விட்டதனாலும் கிழவன் சொந்த நண்பனாகி விட்டதினாலும் தாராளமாகப் பரிசோதிக்கலாமல்லவா? ஒருகால் புருஷனிருந்தால் அவனிடம் சிநேகம் பண்ணிக் கொள்ளவும் செய்யலாமே?

நடு இரவு. நல்ல இருட்டு. மெல்ல மெல்ல காமாக்ஷியின் ஜாகையின் பின்புறம் சென்றேன். நடு அறையில் மின்சார விளக்கெரிந்து கொண்டிருந்தமையால் அங்கு நடப்பதெல்லாம் நன்கு தெரிந்தன. ஒரு நிலைக் கண்ணாடியினெதிரில் காணப்படும் நாற்காலியில், சுமார் 22 அல்லது 23 வயது பிராயமுடைய அழகிய வாலிபனொருவன் பெண்ணுடையில் அமர்ந்து விரைவாக க்ஷவரம் (self-shaving) செய்து கொண்டிருந்தான்!

அச் சம்பவத்தைக் கண்ணுற்றதும் என் மனங் கொண்ட குழப்பம் சொல்ல முடியாது. அவன் யார்? ஒருகால் காமாக்ஷியின் சொந்தக் கணவனாயிருக்கலாமோ? இந்தக் கடைசி எண்ணமே என்னை அதிகமாக பிடித்தசைத்தது.

எப்படியும் அவ்வழகன் காமாக்ஷிக்கு ஏற்றவன்தான். கூர்ந்து பார்த்தால் அவளுக்கும் அவனுக்கும் கடுகத்துணை கூட உருவ வேற்றுமையில்லை. ஒருகால் அவன் காமாக்ஷியின் சகோதரனாயிருப்பானோ! இருந்தால் ஏன் பெண்ணுடையில் இருக்கவேண்டும்!

இப்படி பற்பல சந்தேகங்கள் தோன்றி குழப்பவும், நான் திகிலும் வெட்கமும் கொண்டு "விருவிரு" என்று அங்கிருந்து போய் விட்டேன்.

ஆனால் என் மனம் ஆறவில்லை. பெண் வேஷத்தில் ஒரு ஆடவன் இருந்து இரவில் க்ஷவரம் செய்வதற்குக் காரணமென்ன?

மறுநாள் காலையில் 10 மணிக்கு காமாக்ஷி வீட்டருகில் நின்றேன். காமாக்ஷி ஆபீசுக்குப் போனாள். பழைய வீச்சு, பழைய பார்வை! பழைய வேஷம்! கடுகுகூட வித்தியாசமில்லை. என் மனம் அவளைப் பின் தொடர்ந்தது. அப்பால் விரைந்து அவள் வீட்டுக்குப் போனேன். அங்கு ஆடவனுமில்லை; புருஷனுமில்லை—கிழவனிடம் 'யாராவது வந்தார்களா' என்றதற்குக் கையை விரித்து விட்டான், உண்மையில் அவனுக்கு ஒன்றுமே தெரியாது. முற்றிலும் அவனிடம் கூறினால் அவன் காமாக்ஷியைக் கேவலமாக நினைத்து விடுவானோவென்று அடக்கி விட்டேன்.

அன்று பகலெல்லாம் அவளையே நினைத்திருந்துவிட்டு, இரவு, மெல்ல அவள் வீட்டுக்குப் போனேன். ஆம்—அன்றும் பெண்ணுடை தரித்த ஒரு ஆடவன் க்ஷவரம் செய்து கொண்டிருந்தான். அவனைப் பார்க்க அவன் முந்தியிருந்த வாலிபன்தான் என்று தெரிந்தது. என்ன ஆச்சரியம்.

இப்படி நான்குநாள் இரவு போய்ப் பார்த்தேன்; நான்கு நாளும் அவன் க்ஷவரம் செய்துகொண்டு தானிருந்தான். அதனால் எனக்கு வந்த போராச்சரியமும் பெருவியப்பும் எழுதுந்தரத்தினவல்ல.

உடன் நான்காவது நாள் திடீரென்று குதித்து அவனண்டை சென்று நின்றேன். அவன் சட்டென்று திடுக்கிட்டு என்னை நோக்கினான். ஆம்—அவன் பார்வை அந்த அழகிய காமாக்ஷியினுடைய பார்வைதான். நான் பயந்து திகைத்திருக்கும் அவனைப் பார்த்து "நண்பா, காமாக்ஷி எனது உற்ற சகோதரி. களங்கமற்ற நட்பை இருவரும் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்க, நீயொருவன் தினந்தினம் இரவு பெண்ணுடையுடன் தோன்றி க்ஷவரம் செய்

கிறாயே! அதன் கருத்தென்ன? நீயார்?" என்றேன்.

என்றதும் அவன்:—(திகைத்து) நானா? நானா தினந்தினம் க்ஷவரம் செய்கிறேன்? நீயா பார்த்தாய்?

நான்:—ஆம்; நான்தான் பார்த்தேன்; நீதான் க்ஷவரம் செய்தாய்; ஸ்ரீமதி காமாக்ஷியின் தோற்றம் உனக்கிருப்பதால் நான் சற்றுக் கனிவு கொண்டேன். இன்றேல் நான்கு நாட்களுக்கு முன்பு உன்னைக் கேட்டிருப்பேன்.

இவ்வளவும் நான் உறுதியாகக் கூறியதும், அவன் திகைத்து பயந்து போனான்.

நான் உடன், "சகோதரி காமாக்ஷி; காமாக்ஷி" என்று கூப்பிட்டேன். ஒருவரும் வரவில்லை.

நான்:—நண்பா! காமாக்ஷி யெங்கே? நீ யார்?

அவன் மீண்டும் விழித்துத் திகைத்தான். நான் அவன் முகத்தில் குற்றவாளியின் தோற்ற மிருப்பது கண்டு, "உண்மையை ஒளியாமல் சொன்னால் என் சகோதரியாகிவிட்ட காமாக்ஷிக்காக விட்டு விடுவேன். இன்றேல் விஷயம் பிரமாதமாகிவிடும்" என்றேன்.

அப்பால் அவன் ஒரு பெரிய நெடு மூச்சுடன் ஏமாந்து நடு நடுங்கி என் இருகாங்களையும் பிடித்துக் கொண்டு "நண்பா! என் உயிர் உன் கையிலிருக்கிறது. என்னை மன்னிக்க வேண்டும்" என்றான்.

அவன் பரிதாப நிலைமையைக் கண்டு நான் மன்னிப்பதாகவும் அவனுக்குப் பாதுகாப்பளிப்பதாகவும் கூறினேன். அதன் மேல் அவன் கூறியதாவது:—

"நான்தான் காமாக்ஷி. காமாக்ஷி என்பது பெண்கள் பெயர்; சில ஆண்களும் அதனை உபயோகிப்பதால் அதன் மூலம் நான் என் உபஜீவன மார்க்கத்தை அடைந்து கொண்டேன். நான் பி. ஏ. தேறி மூன்று வருடம் வேலையில்லாது திண்டாடினேன். கடைசியில் பெண்களுக்கென்று 15 காபிஸ்டு வேலை கொடுக்கப்படுவதாகத் தெரிந்த போது, வேறு வழியில்லாது பெண்ணாக நடிக்கலானேன். என் சகோதரி யொருத்தியிடம் காமாக்ஷி என்ற விண்ணப்பத்தைக் கொடுத்து ஜட்ஜினிடம் அனுப்பினேன். அவர் அவளோடு சற்று நேரம் பேசி விட்டு விண்ணப்பத்தில் உத்தரவிட்டு விட்டு அனுப்பி விட்டார். அதன்மேல் வேலைக்குப் போகவேண்டி வந்தபோது நான் ஆஜரானேன். ஸ்திரீ உடையில் பிரவேசித்ததால் எவரும் தெரிந்து கொள்ளவில்லை. இன்றோடு சுமார் ஒரு வருடம் 2 மாதம் 11 நாட்களாகின்றன. அப்படியிருக்கும்போதுதான் நீங்கள் வந்து காதல் செலுத்தப் பார்த்தீர்கள். என்னையே நீங்கள் காதலித்தீர்கள். நான் உங்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளவே கல்யாணமானதாகக் கூறினேன். இரவில் க்ஷவரம் செய்தது என் ஆண்மையை ஒழித்துக் கொள்வதற்காகத்தான். இவ்வாறு ஏமாற்றுப் பண்ணாவிடில் நண்பா! என்போன்ற ஏழைகளுக்கு சர்க்கார் வேலை கிடைக்குமா!" என்றான்.

இந்தக் கதை எனக்கு நிரம்ப வியப்பாக இருந்தது. ஆனால் அவன் உபயோகித்த பாஷை, சொன்ன மாதிரி கெஞ்சிய விதம் எல்லாவற்றையும் நோக்குகையில் களங்க மனம் கொள்ள முடியாது. மேலும் நான் அவனைப் போன்று வேலையில்லாது திண்டாடுபவனல்லவா? ஆதலால் ஒன்றும் பேசாது அவனையே உற்று நோக்கினேன். என் மனம் பாழும் உத்யோக அமைப்பை நறுக்கி—தருவி—அலசிப் பார்த்தது.

அப்பால் அவன் இரகசியத்தை எவரிடமும் கூறுவதில்லை என்று சத்தியம் செய்யச் சொன்னான். நான் செய்தேன். ஆனால் மீண்டும் அவனுக்கு என்மீது சந்தேகம் உதயமாயிற்று. எனவே சின்னாட்களுக்குப் பிறகு அவனது தங்கை ராதாவை எனக்குக் கட்டிக் கொடுத்தான். அவள் உண்மையிலேயே நான் காதலித்த அசல் காமாக்ஷியின் போட்டோவாகும். அண்ணனின் பெண் வேஷமும் அவள் உண்மை வேஷமும் ஒன்றே. ஆதலால் என் ஆசை நிறைவேறி விட்டது; மனங் குளிர்ந்தது. காமாக்ஷி இப்போது என்னைப் பற்றி சந்தேகம் கொள்வதில்லை. ஆனால் வேறு யாராவது என்னைப் போல் அவனைப் பிடித்துக் கொண்டால்!

பாழும் உத்யோகப் பிராப்தி— வேலையில்லா திண்டாட்டத்தின் நிலைமையா? இருக்கட்டும். இனி என் மைத்துனனை யாராவது பிடித்துக் கொள்ளட்டும். அப்போது பாருங்கள் உலகைக் கலக்கி விடுகிறேன்.





## வள்ளி பெற்ற டிக்கட்

அல்லது

# லக்ஷ்மணனின் ஜாரம்

(எஸ். ரமணி, சிந்துபூந்துறை)

லக்ஷ்மணனுக்கு வள்ளி யென்றால் தேன். அவளை விட அவனுக்கு உலகத்தில் உருசியானதாக ஒன்றுமில்லை. பலமுறை "என்மனைவி போனால் நானே இறக்க வேண்டியதுதான்" என்று கூறியிருக்கிறான். இவ்வளவு சிநேகமிருந்தால் அவன் அவளை கொஞ்சமாகவா போற்றிப் பெருமைப் படுத்துவான்? எந்தக் காரியத்திற்கும் அவளை தனக்கு ஆதாவாகக் கொள்வான். வயலிலிருந்து நெல் வந்தால் அவளிடத்தில் தான் கொடுப்பான். முதலாளி வீட்டிலிருந்து பத்துப் பணம் வந்தால் அவளிடம்தான் கொடுப்பான். நண்பர்கள் ஏதேனும் கொடுத்தாலும் அவளிடம் தான் கொடுப்பான். சுருங்கச் சொன்னால் அவளின்றி அவனால் ஒன்றும் செய்ய முடியாது. அவள்தான் அவனது பெட்டி; சாவி; இரகசிய அறை! மனைவி சிற்சில வேலைகளில் 'மந்திரி போல இருக்க வேண்டும்' என்பார்கள் பண்டையோர். ஆனால் லக்ஷ்மணனோ எப்போதும் எல்லா காரியத்திற்கும் தன் மனைவியை மந்திரியாக்கிக் கொள்வான்.

இவ்வாறு புருஷன் தன்னை மதிப்பதை வள்ளி நன்றாக உணர்ந்து கொள்ளாமலில்லை. ஆனதுபற்றி அவள் எந்தக் காரியத்திற்கும் முந்தி ஆக்ஞாபிக்கத் தொடங்கி விடுவாள். புருஷன் கட்டளையை மீறிப் போகக் கூடாது என்பது அவளது அபிப்பிராயம்.

இவ்வாறு புருஷனை அடக்கி யாண்டு வந்த அவளுக்கு மறதி யென்பது ஜாஸ்தி. இருந்தாலும் அவள் நாளடைவில் அதிகாரத்தொனியிலும், தோற்றத்திலும், கட்டளை போடும் பாவனையிலும் வளர்ந்து விட்டாள். அடிக்கடி 'என் சொற்படிக் கேட்கா விட்டால் உனக்கும் எனக்கும் தொடர்பிருக்க முடியாது" என்று லெக்ஷ்மணனிடம் கூறுவது சின்னாட்களுக்குப் பின் வழக்கமாகி விட்டது.

இதில் அவனுக்குக் கொஞ்சம் வருத்தம். "உன்னை விட்டுப் பிரிந்து விடுவேன்" என்ற சொல் கொஞ்சம் அத்து மீறியது என்று கருதினான் லக்ஷ்மணன்.

* * *

இவ்வாறு இருவரும் பேட்டையில் வசித்து வரவும், ஒருநாள் தென் காசியிலிருக்கும் தம் பந்து ஒருவர் வீட்டில் கல்யாணமென்றும், உடன் புறப்பட்டு அங்கு செல்லவேண்டு மென்றும் கடிதம் கிடைத்தது. பந்துவென்றால் லக்ஷ்மணன் தம்பதிகட்கு தேவாமிர்தம். எனவே லக்ஷ்மணன் மனைவி அபிப்பிராயத்தை வேண்டினான். அவள் புருஷனை சிங்காரிக்க விட்டுவிட்டு, தன்னையும் அழகு படுத்தி மூட்டை முடிச்சுகள் சில தயார்செய்து 5 ரூபாயும் கையிலெடுத்துக்கொண்டு ஒரு கட்டுச் சாத மூட்டையுடனும் இரண்டு செம்புகளுடனும் புறப்பட்டாள். சுமார் காலை 8 மணிக்கு ரயிலேறினார்கள். வள்ளி கையிலிருந்த 5 ரூபாயில் 2 ரூபாய்க்கு டிக்கட்டு வாங்கச் சொன்னாள். மற்ற மூன்று ரூபாயும் அவள் கையில் இருந்தன. லக்ஷ்மணன் டிக்கட்டை வாங்கியதும் மனைவி கையில் கொடுத்தான். காரணம் அவள்தான் பொக்கிஷதார், அதோடு பொருட்களைப் பாதுகாப்பதிலும் மிகுந்த கவனமுடையவள் என்பது அவனது எண்ணம்.

டிக்கட்டை வாங்கி பக்கா செய்துவிட்டு வள்ளி தான் வெற்றிலை மென்று புருஷனுக்கும் கொடுத்துவிட்டு ஒரு பெஞ்சில் இடம் பெற்றாள். லக்ஷ்மணன் எதிராக மற்றொரு பெஞ்சில் உட்கார்ந்தான். கொஞ்ச நேரம் இருவரும் ஏதேதோ குடும்ப சமாசாரங்களைப் பேசி யிருந்துவிட்டு, இருந்த இருந்த படியே தூங்கி விட்டார்கள்.

சரியாக மணி 11 ஆனதும் ரயில் ஆம்பூரை அடைந்தது. அங்கு வண்டி சிறிது நின்றது. திடீரென தென்காசி தான் வந்து விட்டதோவென்று கண்ணை விழித்தார்கள். அப்போது டிக்கட் பரிசோதகர் ஒருவர் தோன்றி "டிக்கட் டிக்கட்" என்றார். அவர் சொன்ன ஆங்கிலச் சொல் ஆதியில் வள்ளிக்குப் புரியவில்லை; ஆனாலும் அப்பால் 'துண்டு' என்றதும் தெரிந்து



கொண்டாள். தெரிந்துகொண்டு, புருஷனை நோக்கி "என்னையா துண்டு கேக்கிறுங்களே; கொடு" என்றாள்.

லக்ஷ்மணன் பாக்கப் பாக்க விழித்து விட்டு "ஏண்டி எங்கிட்டையா இருக்கு? நீதான் வாங்கினையே?" என்றான்.

வள்ளி:—நான் எப்போ வாங்கினேன்? நீ மறந்தியா சொல்றே. பாரு—கொடு துண்டை.

இப்படி இருவரும் சண்டை போடத் தொடங்கியதும் பரிசோதகர் "என்னையா டிக்கட் வாங்கினயா இல்லையா? எங்கே—சீக்கிரம்" என்றான்.

லக்ஷ்மணன்:—நீதாண்டி வாங்கினே. எப்போதாவது நான் கையிலே ஏதாவது வைச்சிருக்கேனா. கொடு டிக்கட்டை அந்த ஐயாவிடம்—இல்லையானால்...........

வள்ளி:—என்ன இல்லையானால். பேய் மகனே! உனக்குத்தான் பெண்டிருந்தேனே. பாரு துண்டை.

புருஷனும் மனைவியும் தங்கள் மடிகளிலும், உட்கார்ந்திருந்த இடங்களிலும் மற்றப் பகுதிகளிலும் பார்த்தனர். டிக்கட் கிடைக்கவில்லை. வள்ளி டிக்கட்டை எங்கே வைத்தாள் என்பது கூட ஞாபகமில்லை. ஆயினும் தேடிப் பார்த்தாள். பாவம்! லக்ஷ்மணன் என்ன செய்வான்? மனைவிக்குப் பயந்து அவனும் எங்கும் தேடினான்.

இதனைக் கண்ட பரிசோதகர், "நீங்கள் பொய் சொல்லுகிறீர்கள். டிக்கட் வாங்காமல் ஏறி உட்கார்ந்துகொண்டு ஏமாற்றப் பார்க்கிறீர்கள்" என்று கூறிக்கொண்டே பக்கத்திலிருந்த ஒரு போலீஸ்காரனிடம் ஒப்படைத்து விட்டான். புருஷனும் பெண்டாட்டியும் மூட்டை முடிச்சுகளுடன் இறக்கப்பட்டார்கள். அங்கு ஸ்டேஷன் மாஸ்டர் கையிலிருந்த மூன்று ரூபாயையும் பிடுங்கிக் கொண்டார். அடடா அவர்கட்கு புறப்பட்ட விசையில் கல்யாணத்திற்குச் செல்ல முடியவில்லையே! மேலும்கையிலிருந்த பணமும் பிடுங்கப்பட்டுப்போயிற்றே! அதோடு, வந்த அவமானம் கொஞ்சமா?

லக்ஷ்மணன் அந்த அவமானத்தைத் தான் மல்லாவற்றையும் விட அதிகமாய்ப் பொருட்படுத்தினான். மனைவி டிக்கட்டை வாங்கி வைத்துக்கொண்டு போலீஸ்காரன் கையில் தன்னை சிக்கும்படி செய்யலாமா? என்றே எண்ணினான்.

அவனைப்போலவே அதிக கோபமும் ஏமாற்றமும் அவமானமும் அடைந்திருந்த அவள் "நீ இப்படி முட்டாள் தனமாக நடந்து கொண்டதற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. உனக்கும் எனக்கும் இசையாது. நீ உன் வேலையைப் பாரு. நான் என் காரியத்தைப் பார்த்துக் கொண்டு ஒதுங்கி விடுகிறேன். இப்படியொரு மடையனை புருஷனென்று கட்டியழ விதியா? துண்டு வாங்கி வச்சிக்க தெரியாத ஒருவனை மாப்பிளை யென்பதை விட ஒரு கழுதையைக் கட்டிக் கிடலாம்" என்றாள்.

லக்ஷ்மணன் எதைப் பொறுத்தாலும் நீங்கிவிடும் சங்கதியைத் தான் பொறுத்துக் கொள்ள மாட்டான். அதிலும் ஒன்றுமறியாத தன்னிடம் வள்ளி நீங்கி விடுவதாகச் சொன்னாளே யென்றதும் அளவிட முடியாதவாறு கோபமூண்டு விட்டது. உடன் "சரி என் சாமான்களைக் கொடுத்துவிட்டு நீங்கி விடு" என்றான்.

வள்ளி தன் புருஷன் பொழுது போக்காகக் கூறுகின்றானென்று நினைத்துக் கொண்டு சரியென மறுமொழி கூறி சாமான்களைப் பங்கிட்டாள். கட்டுச் சாதத்தில் தலைக்குப் பாதி எடுத்துக் கொண்டார்கள். துணிகளில் வெள்ளையானவை யெல்லாம் லக்ஷ்மணனை நாடின; கலர் போட்டவைகளெல்லாம் வள்ளியிடம் வந்தன. வெற்றிலைப் பாக்குப் புகையிலையில் ஆளுக்குப் பாதியாக எடுத்துக் கொண்டார்கள். தண்ணீருக்காக வைத்திருந்த இரண்டு செம்புகளில் தலைக்கொன்றாகப் பகிர்ந்தனர். இவற்றைத் தவிர வேறு சாமான்களில்லை. உடன் இருவரும் இரு திசைகளை நோக்கிப் போனார்கள்.

லக்ஷ்மணன் மிகுந்த ஏமாற்றுடன் பேட்டைக்கே போய் விடுவதாக நினைத்து ஆம்பூரைக் கடந்து சென்றான். அப்போது வந்த வருத்தம் பிரமாதம், கலங்கித் துயரப்பட்டு நடந்தான்! சுமார் 1-30-க்கு கர்ண நதிக்கரை வந்தது. நல்ல வெயில். ஆற்றங் கரையில் மரங்களும் பிறவும் ரமணீயமாயிருந்தன. ஆதலால் அங்கேயே உட்கார்ந்தான் கெடுநோம்.

இளைப்பாறியதும் பசி எழுந்து வாட்டலாயிற்று. அதற்குத்தான் கையில் கட்டுச் சாதம் இருக்கின்றதே. அதனை ஒரு இலையில் வைத்து சாப்பிடலானான். சாப்பிடுமுன் சாதத்தை அழுத்தியதும் "கிர்" என்று வெளியே வந்தது ஒரு டிக்கட்டு!

அதைக் காண கொண்டான் ஆச்சரியம். "அடடா சாதத்திலல்லவா இருக்கிறது டிக்கட்டு?" என்றான் தனக்குள்.

உடன் ஏதோ நினைத்துக்கொண்டே சாப்பிட்டு விட்டு நேராக ரயில்வே ஸ்டேஷனை நோக்கி ஓடினான். வழியில் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்திருந்தாள் வள்ளி மிகவும் சோர்வுடன். அவளைக் கண்டதும், இந்திர பதவி கிடைத்து விட்டதாக நினைத்து அவன், "வள்ளி டிக்கட்டு ஒன்று சாதத்திலல்லவா இருக்கிறது?" என்றான். அவள் ஏறிட்டுப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். "ஏண்டி வள்ளி கோபிக்கிறாய்? நானா டிக்கட்டை சாதத்தில் வைத்தேன். நீதானே சாத மூட்டையை வைத்திருந்தாய்? நீதானே ரயிலில் அவிழ்த்துக் கட்டினாய்" என்றான்.



அதற்கும் அவள் ஒன்றும் பேசவில்லை. எனவே அவன் வள்ளியின் பங்கான கட்டுச் சாதத்தை எடுத்துச் சாப்பிடலானான். அதற்குள்ளிருந்தது மற்றொரு டிக்கட்டு.

"அடி வள்ளி! பார்த்தாயா மற்றொரு டிக்கட்டை! உன் சாதத்தில்?"

அவள் முகம் மலர்ந்தது.

லக்ஷ்மணன்:—டிக்கட் மறைந்தது தான் போகட்டும்; நாம் பட்ட அவமானமும் தொலையட்டும். எப்படி நாமறியாமலே டிக்கட்டை சரியாக பங்கிட்டு விட்டோம்?

அதுதான் ஆச்சரியமாகத் தோன்றிற்று வள்ளிக்கும்.

பிறகு இருவரும் பேசிக் களித்து கால் நடையாகவே பேட்டைக்கு வந்தார்கள்.

கல்யாண வீட்டுக்கு லக்ஷ்மணனுக்கு ஜுரம் என்று ஒரு காகிதத்தை எழுதிப் போட்டு தப்பித்துக் கொண்டார்கள்.



# மாதர்கள் முன்னேறும் மாண்புறு நாடு

## பழமையிற் பட்டதென்ன? புதுமையில் புகுந்ததென்ன?

(ஸ்ரீமதி கோஹினூர் பரிமளம் எழுதுவது)

உலகில் இன்று மிகவும் முன்னேறி இருக்கும் சகோதரிகள் வாழுமிடம் ருஷ்யாவென்று சொல்லப்படுகிறது. சில ஆண்டுகட்கு முன்னர் அங்குள்ள பெண் மக்கள் மிகவும் தாழ்ந்த நிலைமையி லிருந்தார்கள். புரட்சியின் பின்னர் அவர்கள் நிலைமை மாறிவிட்டது. அம்மாற்றத்திற்குக் காரணம் முற்றிலும் புரட்சியோ அன்றி வேறேது வேணுமோ!—எதுவாயினும் சரி நமக்குக் கவலையில்லை. நான் இங்கு என் அன்பான சகோதரிகட்கு ருஷ்யப் பெண்களின் பண்டைய நிலைமை என்ன, இப்போதைய நிலைமையென்ன என்பதைப்பற்றியே கூறுகிறேன்:—

நமது நாட்டில் பொதுவாக பெண்கள், புருஷர்களின் விஷய சுகங்கட்கேற்ற ஒரு கருவியென்று கருதப்படுகிறார்கள். இப்படிப்பட்ட கருத்து வாலிபர்கட்கு மட்டிலுமல்ல; வயது வந்த மக்கட்குமிருந்து வருகின்றது. ஆகல்பற்றியே "பெண்கள் சுதந்திரமடைய வேண்டு"மென்று கூறினால் ஆடவர்கள் "பெண்கள் சுதந்திரம் பெற்றால் இஷ்டப்பட்டவர்களை யெல்லாம் பிடிக்கத் தொடங்கி விடுவார்களே" என்று கேட்கின்றார்கள். எப்போதும் பெண்கள் பிள்ளைப் பெறும் கருவிகள் என்று நாட்டில் ஏற்பட்டிருக்கும் இத்தகைய எண்ணம் ஒழிந்தாலல்லாது நாடு முன்னேறப் போவதில்லை. எனக்குத் தெரிந்த வரையில் அந்த ஒரு கருத்து மட்டிலும் மாற்றமும் ஏற்பட்டு விட்டால்போதும்; இந்தியா முன்னேறி விடுமென்று நம்புகின்றேன். மொத்த ஜனத்தொகையில் பாதிக்கு மேலிருக்கும் ஒரு பாகத்தை மன்பதை முழுவதையும் வெறும் கருவிகள் என்று கருதி விட்டால் என்னே அந்நாட்டினர் மதி! எவ்வாறுதான் அவர்கள் முன்னேறுவார்கள்? பெண்களென்றால் சக்தி தேவியென்றும் கடவுளின் நேர்பாதியென்றும், அவர்கள் உயர்வுபற்றியே பிரமா நாவில் வைத்திருக்கிறான் என்றும், மகாவிஷ்ணு நெஞ்சிலேயே பெண்களை வைத்திருப்பது பெண்களின் மதிப்புப் பற்றித்தானென்றும், ஆறுமுகன் இருமருங்கிலும் பெண்களை அணைத்திருப்பது பெண்கள்மேல் வைத்திருக்கும் பற்றுத்தானென்றும் என்னென்னமோ கதை சொல்கிறார்கள்; சாஸ்திர மெழுதுகிறார்கள்; வணங்குகிறார்கள். என்றாலும் அவர்களை மனிதர்களென்றுகூடக் கருதுகின்றார்களில்லை. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவையும், சிவாஜியையும், லெனினையும், விவேகாநந்தாவையும், காந்திஜியையும், நெப்போலியனையும், ஸ்ரீ அசோகரையும், புத்தரென்ன, மகமது நபியென்ன, கிருஸ்துவென்ன இவர்களெல்லோரையும் ஈன்றெடுக்கத் தகுந்த மாண்புடைய பெண்களை—குறிப்பிட்ட இவர்களெல்லாம் 'தாய்' என்று போற்றி வணங்கத் தகுந்த பெண்களை அடிமைகளென்று சொல்வார்களென்றால்— அடிமைகளாக்க நினைப்பார்களென்றால்—என்னே இந்தியர்கள் மதியீனம்! பெண்மை அடிமையுற்றால் அதிலிருந்து தோன்றும் ஆண்மை யெப்படி வளமுறும்? உற்பவிக்கும் நிலத்தைப் பொறுத்ததன்றோ வளரும் செடியின் இயல்பு? பெண்களை அடிமையாக்கிய எந்தத் தேசமும் முன்னேறியதில்லை; முன்னேறிய தேசத்தில் பெண்மையை அடிமைப்படுத்திய நாடும் இல்லை. அதேபோல பெண்மையை அடிமைப்படுத்தி சிறப்பற்ற நாடும் கிடையா!



காதலன்:—உலகில் எத்தனை கோடி டன் உப்பிருக்கிறது; பார்!...என்றும் இந்த வடைக்குப் போட உனக்கு உப்புக் கிடைக்கவில்லையே!

காதலி:—கடலுக்குத்தானே செல்கிறோம்; உப்பு எதற்கு என்றிருந்து விட்டேன்.

இனி ருஷ்ய நாடு எவ்வாறு பெண்களை நடத்தியது, நடத்துகின்றது என்பதை ஆராய்வோம்.

### பெண்கள் விளையாட்டுக் கருவிகள்.

ஒரு காலத்தில் ருஷ்யாவில் கிட்டத்தட்ட பெண்கள் புருஷர்களில் விளையாட்டுக் கருவியாகவே இருந்து வந்தார்கள். ஆனால் இன்றைய நிலைமையோ தலை கீழ் மாறிவிட்டது. எந்தத் தேசத்துப் பெண்களும் ருஷ்யமாதர் நிலைமையைப் பார்க்கும்போது பொறாமைப் படாமலில்லை.

மேனாளில் ருஷ்யப் பெண்கள் புருஷர் கக்ஷியையே சேர்ந்திருந்தார்கள். புருஷர் என்ன சொன்னாலும் மறு மொழி புகலாது தாழ்ந்து பணிவர். கணவர் மனமின்றி எந்த வேலைக்கும் முற்பட மாட்டார்கள். புருஷன் என்ன கொடுமை செய்தாலும் விவாக பந்தத்தை யொழித்துக் கொள்ள மாட்டார்கள். பெண் குழந்தைகட்கு தந்தையின் ஆஸ்தியில் 14ல் ஒரு பாகத்திற்குத்தான் பாத்தியமுண்டு; எஞ்சிய 13 பங்கு ஆண் குழந்தைகட்கே போய் விடும். கல்யாணமானால், மணப் பெண்ணின் செல்வமெல்லாம் மணமகனின் அதிகாரத்தின் கீழ் வந்து விடும்.

இது பொதுவாக ருஷ்யாவெங்குமுள்ள பெண்களின் கதியானாலும் கிராமாந்தரத்துப் பெண்கள் நிலைமை மிக மிகக் கேவலம். புருஷர்கள் பெண்ணை அடிப்பதை ஒரு பொழுது போக்காகக் கொண்டிருந்தார்களென்றால் அதிகமென்ன சொல்ல வேண்டும்?

### புரட்சிக்குப் பின்

இப்படியிருந்த பெண்கள் நிலைமையை மிக முக்கியமாகக் கவனித்தார்கள், ருஷ்யப் பொதுவுடமைக்காரர்கள். 1917-ல் புரட்சி ஏற்பட்டதும் பொதுவுடமைக்காரர்கள் செய்த ஒரு பெரிய வேலை பெண்களுக்காகச் சட்டமியற்றியதாகும். லெனின் ஒரு சமயம் (மேற்படி புரட்சிக்குப் பிறகு) பேசிய போது அடியில் வருமாறு கூறினார்:—

சோவியத் ஆட்சி ஏற்பட்ட முதல் மாதத்தில் பெண்களைப் பற்றிய சட்டத்தில் ஒரு பெரிய புரட்சி நிகழ்த்தப்பட்டுள்ளது. அப் புரட்சி ஒரு சிறு பகுதியையேனும் கைப்பற்றாமல் விட்டு வைக்கவில்லை.......இன்று உலகில் எந்த நாட்டிலுமில்லாதவாறு ருஷ்யப் பெண்கள் விடுதலை பெற்று எவ்வாற்றானும் ஆடவர்கட்கு ஒப்பாக வந்திருக்கின்றார்களென்று கூறலாம். நாம் செய்து முடித்திருக்க வேண்டிய முக்கியமான காரியங்களில் இது ஒன்றாகும். இன்று வெளி தேசங்கள் ரஷ்யப் பெண்களை மாதிரியாக எடுத்துக் கொள்ளலாம். எனினும் நாம் முதற்படிக்கே வந்திருக்கின்றோமென்று கூறுகிறேன்.

தொழில் சம்பந்தமாக ருஷ்யர் பெண்கட்கு செய்த சௌகரியங்கள் பலப் பல. எந்தப் பெண்ணையும் தினசரி ஏழு மணிக்குமேல் வேலை வாங்கக் கூடாது என்று சட்டமியற்றினார்கள். வருடத்தில் சில நாட்கள் விடு முறை கொடுக்கவும், இன்ஷூரன்ஸ் செய்ய உதவவும், நீண்ட நாள் வேலை செய்வார்க்குபென்ஷன் (உபகார சம்பளம்) கொடுக்கவும், இளைப்பாறும் இடங்கள் அமைக்கவும், சுகாதார நிலயங்கள் கட்டிக் கொடுக்கவுமான பொறுப்பை முதலாளிகள் தலையில் தூக்கி வைத்தார்கள். அதோடு குழந்தைகளை வேலைக்கு எடுக்கக் கூடாதென்றும், பதினாலுக்கு மேல் 16 வயது வரையுள்ள பெண்கட்கு தினசரி 4 மணி வேலையே பழக்கம் வருவதற்காகக் கொடுக்கவேண்டுமென்றும் பிறகு 16 முதல் 18 வரை வயதுடையவர்கட்கு ஆறு மணி வேலையே வேண்டுமென்றும் சட்டமியற்றினார்கள்.

இத்தகைய பொதுச் சட்டங்கட்குப் புறம்பாக சில விசேஷ சட்டங்களும் தொகுக்கப் பட்டன. அவையாவன:—

(1) தூசியடையு மிடங்களிலும் அபாயகாமான மருந்துகள் நடமாடும் இடங்களிலும் பெண்களை வேலைக்கு வைக்கக் கூடாது.

(2) வருடத்தில் 4 மாதம் குழந்தைப் பேறுக்காக ரஜா கொடுக்க வேண்டும். பேறு இல்லாவிடில் கடுமையான வேலை பார்ப்பவராக விருந்தால் வருடத்தில் 4 மாதம் லீவு விட்டுவிட வேண்டும்.

(3) கருப்பக்காரிகட்கு இரவில் வேலை வைக்கக் கூடாது. ஓவர்டைம் (over time–வேலை நேரம் கடந்து) வேலையும் கொடுக்கக்கூடாது.

(4) எந்த கருப்பக்காரியையும் அவள் சம்மதமின்றி இடத்திலிருந்து போக சொல்லக்கூடாது.

## கிரேட்டா கார்போ

ஊழியன் நேயர்கட்கு ஹாலிவுட் பிரபல (சினிமா) நடிகையாகிய கிரேட்டா கார்போவைத் தெரியும் ஸ்விட்ஜர்லாந்தில் பிறந்து பெரிய கியாதியுடன் விளங்கும் அவர் விஷயங்கள் இரகசியமாக இருக்கின்றன. சதா கவலை குடிகொண்ட தோற்றத்துடனும் உலகில் வெறுப்புற்ற பாவனையுடனும் இருக்கும் அவர் எந்த விஷயத்தில் விருப்பங் கொண்டிருக்கின்றாரென்று தெரியவில்லை. சமீபத்தில் அவர் நடித்த ஒரு வெற்றிகாமான படம் அரசி கிருஸ்தியானா வென்பது. இப்போது கார்போ தம் சொந்த நாடாகிய ஸ்வீடனுக்கு வந்து



தங்கப் போகிறார். அதற்குமுன் அரசி கிருஸ்தியானா வாழ்ந்துவந்ததாகிய பெரிய அரண்மனை விலைக்கு வாங்கப்பட்டிருக்கிறது. வாங்கும்போது கார்போ தம் சொந்தப் பெயருக்கே பத்திரம் எழுதி வாங்கினாராம். அப்பெயர் ஸ்டோரா நிக் கல்விக்சன்.

அரண்மனை ஸ்டாக் ஹோம் தீவக் கூட்டத்தினிடையி லிருக்கிறது. அதனை படகினால்தான் அடைய முடியும். 1500-ல் அவ்வரண்மனை கட்டப்பட்டதாகச் செய்தி. 18-வது நூற்றாண்டில் அரசி கிருஸ்தியானா வேட்டைக்காக அவ்வரண்மனை யிருக்கும் தீவுகட்குச் செல்வாள்.

கார்போ மேற்படி அரண்மனையை வாங்கியதும் அவள் மீதிருக்கும் மறைந்த இரகசியங்கள் அதிகமான சந்தேகத்தைக் கொடுக்கின்றன.



(5) வேலை நேரங்களில் விடப்படும் இடைவேளை விடுதலையோடு தாய்மார்கட்கு அதிகப்படியான ஓய்வு (விடுதலை) கொடுக்கப்பட வேண்டும்.

சகோதரிகளே! பெண்கட்கு இப்படிப்பட்ட சௌகரியங்கள் வேண்டியதல்லவா? இயற்கையில் ஆண்களை விட மெல்லிய சரீர அமைப்புப் பெற்றவர் என்பதோடு ஆடவர்கட்குத் தாயாக இருப்பவர் அன்றோ? பெண்கட்கு சௌகரியம் செய்தால்தானே அவர்கள் வயிற்றில் பிறக்கும் புருஷர், ஆண்மையும் வளமையும் செழுமையும் பெற்றிருப்பர்!

சோவியத் சர்க்கார் மேற்படி சௌகரியங்களைச் செய்ததோடு தனிச் சாலைகள் கட்டி அங்கு தங்க விரும்பும் பெண்கட்கு இடம் கொடுக்கும்படி தொழிற்சாலை முதலாளிகட்கு சட்டம் செய்தார்கள்.

### தொழிலாளர் அபிவிருத்தி

இவ்வாறு பற்பல சௌகரியங்கள் செய்யப்பட்டதால் பெண் தொழிலாளிகள் தொகை பந்துபோல் உயரலாயிற்று. அவர்கட்குள் வேலையில்லா திண்டாட்டம் நீங்கிற்று; எனவே வறுமை பறந்தது. கல்வி, அறிவு, உலக அனுபவம் பெருகலாயின. சில நாள் சென்ற பிறகு பெரும்பாலான பெண்கள் எல்லாவித தொழிற்சாலைகட்கும் வந்து குழுமி விட்டதால் சர்க்கார் ஒரு சட்டம் மூலம் பெண்களின் உடலியற்கைக்குப் பொருந்தாத தொழில்களில் அவர்கள் அனுமதிக்கக் கூடாது என்று கண்டிப்புச் செய்தார்கள்.

இத்தியாதி சௌகரியங்களால் பெண்கள் நிலை எளிதில் உயர்ந்து விட்டது. கால்லண்டேய் என்ற பெண் உலகிலேயே முதலாவது அரசியல் தூதரானார். கிராமப் பஞ்சாயத்திற்கு ஆயிரக் கணக்கான பெண்கள் உறுப்பினராய்ச் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். சோவியத் ஒற்றுமைக் காங்கிரசிற்குப் பல பெண்கள் அங்கத்தினராயினர். சைபீரியாபோன்ற இடங்களில் பல பஞ்சாயத்துகளின் தலைவிகளாக அமர்ந்தனர் பெண்கள். அதே போல நிலங்கட்கு பெண்கள் சொந்தக்காரர்களாகி பலர் உழவர்களானார்கள். இது சுமார் ஆறு ஏழு வருடங்கட்கு முந்திய கதை. இன்று பெண்கள் அடைந்திருக்கும் மாற்றம் நிரம்ப நிரம்பப் பெரிது விமான மோட்டிகளாகப் பலர் இருக்கின்றனர். தொழிற்சாலைத் தலைவர்களாகப் பலரிருக்கின்றனர். நீதிபதிகளாக இருக்கின்றனர் பலர். இராணுவத்தில் இருக்கின்றனர் பலர். போலீசில் இருக்கின்றனர் எண்ணிறந்தோர். ரசாயன ஆராய்ச்சியாளாகவும் விஞ்ஞானிகளாகவும் இயந்திர மோட்டுபவர்களாகவும் ஏராளம் பேர் இருக்கின்றார்



பெண்கள் இந்திய சங்கத்தின் பம்பாய்க் கிளை போனவாரம் ஒரு பெரிய கூட்டம் நடாத்தி குவெட்டா பூகம்பக் கஷ்ட நிவாரணத்திற்காக நிதி யுதவும் படிக் கேட்டுக் கொண்டது. அக் கூட்டத்திற்கு லேடி ஜெர்பாய் ஹோர்மஸ்ஜீ மோடி தலைமை வகித்தார். —cou.

கள். சமீபத்தில் நடந்த ஒரு உடற் பயிற்சிப் போட்டியில் ஆயிரக்கணக்கான பெண்கள் தோன்றி ஆடவர்களோடு போட்டி போட்டு பரிசுபெற்றனர். அவர்களில் 18 வயதான ஒரு பெண் இயற்றிய வேலைகள் அபாரம். பல போட்டிகளில் முதற் பரிசுபெற்று சர்க்காரால் விசேஷமாகக் கவுரவிக்கப் பெற்றாள். இப்படிப்பட்ட ஆற்றல் இந்தியப் பெண்களிடமில்லாமலில்லை. ஆனால் வெளிப்படுத்தும் வசதி கொடுக்கப்படுகின்றார்களில்லை; ஊக்க மூட்டப்படுகின்றார்களில்லை. அப்படியிருந்தும் சிறந்த கவியாக இருக்கின்றார் சரோஜனிதேவி, பெரிய கதாசிரியையாக இருக்கின்றார் ஸ்ரீ சீதாதேவி, சிறந்த பண்டிதையாக விளங்கிறார் மிஸ். தாருதத்தர், பெரிய தியாகியாக மிளிர்கின்றார் பட்டினியிருக்கும் சீக்கியப் பெண்! பாம தேச பக்தையாக ஒளிர்கின்றார் ஸ்ரீமதி கமலாநேரு. இதுபோல் பல துறையில் பெயர் பெற்றிருப்போர் ஆயிரமாயிரம். இந்த நிலைமையில் போதுமான சுதந்திரம் கிடைத்துவிட்டால் நம் பெண்கள் ஏன் ருஷ்ய மாதரோடு ஒப்பாகார்?

### 'ஜினோட்டேல்'

சோவியத் பெண்களுக்குள்ளே 'ஜினோட்டெல்' என்று ஒரு கக்ஷி இருக்கிறது. இக்கட்சி பெண் கல்வியிலும், பெண்ணுரிமையிலும் விசேஷமாக நாட்டம் செலுத்துகின்றது. அதிலிருந்து பல பத்திரிகைகள் வெளியிடப்படுகின்றன. அடிக்கடி கூட்டம் கூட்டவும், சுகாதாரம், குழந்தை வளர்ப்பு, ஐக்கிய சங்கநலம், அரசியல் முதலியன பற்றி பிரசங்கம் நிகழ்த்தவும் செய்வது ஜினோட்டெல் செய்யும் மற்றொரு வேலை.

வருடா வருடம் மார்ச் 8-ந் தேதியை சர்வதேச பெண்கள் தினம் என்று கொண்டாடுகிறார்கள் ருஷ்ய மாதர்கள்.

### கல்யாணம்

கல்யாண விஷயத்திலும் ருஷ்யப் பெண்கள் அடைந்திருக்கும் சீர்திருத்தம் பெரியதே. கூடிய வரையிலும் மதச் சடங்கு பின்பற்றப்படுவதில்லை. கல்யாணச் செலவு மிகச் சுருக்கம். அநேகமாக ரஜிஸ்தர்செய்து ஒன்றிரண்டு சிநேகிதர்கட்கு விருந்து வைப்பதோடு கல்யாணம் முடிந்து விடுகிறது. இருவர் தம்பதிகளாக சேர்ந்து கொள்வதற்குரிய கட்டுப்பாடு காதல்தான். காதலின்றி ருஷ்யாவில் கல்யாணமில்லை. ஆடவர் பல மனைவிகளை மணக்கும் சமாசாரத்தின் வாடையே ருஷ்யாவில் இருக்க முடியாது.

கல்யாணம் செய்வது எவ்வளவு எளிதோ அவ்வளவு இலேசானது விவாக பந்த மறுத்துக் கொள்வதும். (தம்பதிகள்) இருவரும் சம்மதித்துக் கொண்டால் போதும்; உடன் நீங்கிக் கொள்ளலாம். எனவே சிலர் "அடிக்கடி விவாகரத்து நடக்கலாமே ருஷ்யா

வில்" என்று நினைக்கலாம். அது தவறு. உலகில் எந்த நாட்டையும்விட அங்கு விவாக ரத்து குறைவாகும். காரணம் திருமணத்தில் புகுந்தி யிருக்கும் உரிமையால் தம்பதிகள் இணைந்து கொள்ளும் மாதிரியே. எனவே ரத்து செய்துகொள்ள வேண்டிய அவசிய மில்லை.

கல்யாணமானால் தம்பதிகள் இருவரும் ஒருவரை யொருவர் பாதுகாக்கக் கடமைப் படுகிறார்கள். தகா வழியில் பிறந்த குழந்தைகட்கு சட்டப்படியான எல்லாவுரிமையுமுண்டு. ஒரு குழந்தை 14 வயதான பிறகு அவன் அல்லது அவள், என்ன பெயரை என்ன மதத்தை ஏற்றுக்கொள்ள விரும்புகின்றாளோ அல்லது விரும்புகின்றானோ அவையே அவனது அல்லது அவளது பெயராகவோ மதமாகவோ இருக்கும். பெற்றோர் தம் குழந்தையைத் தம்முடனேயே வைத்துக்கொள்ள வேண்டும். கல்யாண வயது ருஷ்யாவில் 18 ஆகும். விபசார மென்பதை ருஷ்யாவில் காணமுடியாது. சமூக அமைப்பு நல்ல அஸ்திவாரத்தால் கட்டப்பட்டிருப்பதால் அந்தக் கெட்ட வழக்கத்திற்கு அங்கு அவசியமில்லை. சில வெளி நாட்டார் ருஷ்யா முழுவதையும் பார்த்து விட்டு எந்த நாட்டையும் விட விபசாரம் மிகமிகக் குறைவாயிருக்கிறதென்று கருத்து வழங்கியுள்ளார்கள். சோவியத்து சர்க்கார் ஏதேனும் ஒரு அங்கத்தினர் விபசார கோஷ்டிக்கு ஆளாவதாகத் தெரிந்தால் அவரை சங்கத்திலிருந்து நீக்கிவிடலாமென்று கடுமையான சட்டமியற்றி யுள்ளார்கள். சாதாரணமாக, பிறிதொருவன் உழைக்கத் தான் உண்டு தொழிலின்றி சோம்பேறியாக வாழ்ந்திருக்கும் முதலாளிகளே பொழுது போக்குக்காகவும் வேறு வகையின்றியும் விபசாரிகளை நாடுவர். அப்படிப்பட்ட முதலாளிகள் மாய்ந்து எல்லோரும் தொழிலாளிகளாக இருப்பதினாலேயே ருஷ்யாவில் விபசாரம் குறைந்திருக்கிறது.

பெண்மை பேணல்

மாஸ்கோ நகரில் ஆற்றங் கரையில் தாய்மையின் அரண்மனை என்று ஒரு பெரிய கட்டிடம் நிமிர்ந்து நிற்கிறது. அதில் பெண்கள் ஆரோக்கியமாக வாழ்வதற்கு என்ன வழி யென்றும் சிறுவர் சிறுமியர் சுகவாழ்வு வாழ்வதற்கு மார்க்க மென்னவென்றும் போதிக்கும் பல அமைப்புகள் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. அங்கு ஜனங்கள் சுகாதாரத்திற்குப் பயிற்சி அளிக்கப் பட்டு நோய்கட்கெதிராகப் போராடவும், பிரசவத்தில் உதவி செய்யவும், வைத்திய சிகிச்சை கொடுக்கவுமாக அனுப்பப் படுகின்றனர். பற்பல படங்களும் சுவரொட்டிகளும் மேற்குறித்த அரண்மனையி லிருக்கின்றன. அவற்றையெல்லாம் பயிற்சி பெற்ற பெண்கள் ஊரூராகக் கொண்டு சென்று ஆரோக்கியம் அடைய ஒரு தாய் என்ன செய்ய வேண்டும், குழந்தை என்ன செய்ய வேண்டு மென்று போதிக்கின்றனர். விசேஷமாக அந்த பயிற்சி பெற்ற பெண்கள் எப்படி குழந்தைக்கு தாயார் பாலூட்டுவது என்பதையே பயிற்றுகின்றனர். ஒரு படத்தில் ஒரு கன்று பால் குடிக்கும் குழந்தையின் பக்கத்தில் ஏமாந்து நின்று குழந்தையை நோக்கிய வண்ணமே, "என் தாயின் பாலை நீ ஏன் குடிக்கிறாய்?" என்றுகேட்பது போல தீட்டப்பட்டிருக்கிறது. இதன் கருத்து தாய்ப்பாலையே குழந்தைகள் பருகவேண்டு மென்பதன்றோ?

தாய்மையையும் சிசுத்தன்மையையும் மேற்பார்க்கும் தனி இலாகாவொன்று ருஷ்யாவில் இருக்கின்றது. அது கிராமங்களில் ஆயிரக்கணக்கான நர்சரிகளை (பாதுகாக்கு மிடங்களை) ஆரம்பித்துள்ளது. விவசாயிகள் இந்த இலாகாவுக்கு ஏராளமான நன்கொடையளித்துள்ளார்கள். சுமார் ஒன்பது வருஷங்கட்கு முன்பு விவசாயிகள் 6 லட்சத்து 50 ஆயிரம் ரூபில்கள் கொடுத்திருந்தார்கள். நாள் செல்லச் செல்ல நர்சரிகள் பெருகிக் கொண்டே போகின்றன.

இத்தியாதி சர்க்கார் அபிவிருத்தி முறைகள் நாட்டில் பெரிய புரட்சியை உண்டு பண்ணி ஒரு காலத்தில் முக மூடி போட்டு அடுப்படியில் (வெயில் முகங்காணாது) பதுங்கியிருந்த துருக்கிஸ்தான், அஜர்பெயிஜான் பெண்களைக் கூட இன்று புருஷர்கட்கொப்ப சம நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டிருக்கிறது.

இந்த நிலைமை நம் நாட்டில் ஏற்பட்டால் ஆடவரும் பெண்டிரும் நல்வாழ்வு வாழலாமென்ற ஆசையுடனேயே இதனை எழுதினேன்.

---

# இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம், கொழும்பு.

வைகாசி மீ 29உ (10-6-35)ல் இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கக் கூட்டத்தில் வருஷப் பொதுக்கூட்டம் கூடியது. திரு. எஸ். ஆர். எம். வள்ளியப்ப செட்டியார் தலைமை வகித்தார்.

காரியதரிசி திரு. பெ. பெரி. சுப்பிரமணிய செட்டியார் ஸ்ரீமுகவருஷ பங்குனிமீ 19 முதல் பவவருஷ பங்குனி 18உ வரையுள்ள கணக்குகளை வாசிக்க சபையோரால் அங்கீகாரம் செய்யப் பெற்றது.

திரு. வ. ராம. வ. அ. லெக்ஷ்மணன் செட்டியார் "நமது சங்கம்" என்பது பற்றி மிக அழகாக ஓர் சொற்பொழிவாற்றினர்.

திரு. R. M. S. M. கதிரேசன் செட்டியார் "இன்ப வாழ்க்கை"ப் பற்றி இன்புற பேசினர்.

திரு. முரு. ராம சேதுராமன் செட்டியார் "முயற்சி" என்பதுபற்றி பிரசங்கம் செய்தார்.

திரு. V. ருமணதன் செட்டியார் சங்கத்தைத் திறமையுடன் நடத்திவர வேண்டுமென்றும் பொது ஸ்தாபனங்களில் நமது சமூகத்தார் பிரதிநிதித்துவம் பெறவேணும் என்றும் உற்சாகத்துடன்பேசி பின், கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப் பட்டன:—

1. பர்மா இந்தியத் தூதுக்கோஷ்டியின் தலைவராக இங்கிலாந்துக்கு விஜயம் செய்து வெற்றியுடன் திரும்பியதற்கும், சைகோன் தடையுத்தரவை நிவர்த்தித்து நமக்கு அநுகூலம் செய்ததற்கும், நமது ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்களை இச்சங்கம் பாராட்டுகிறது.

2. அரசாங்க சபையிலும், நகர சபையிலும், ஸ்தானம் பெறவும் புதிதாக ஏற்படவிருக்கும் அரசாங்க உதவி பெற்ற வங்கியில் ஒரு டைரக்டர் ஸ்தானம் பெறவும் நமது சங்கம் தீவிரமான முயற்சி செய்வதென்றும் அதற்கு முன் வருவார்களுக்கு வேண்டிய உதவியைச் சங்கம் செய்வதென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

3. அரசாங்க உதவி பெற்ற வங்கிக்கு டைரக்டர் ஸ்தானத்திற்கு தொழிற் கமிட்டியிலிருந்து பதில் கிடைத்ததும், வெ. வீர. நா. மு. சுப்பய்யா செட்டியார் அவர்கள் பெயரை சிபார்சு செய்வதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

அக்கிராசனர் அவர்களின் முடிவுரைக்குப் பின், தலைவரவர்கட்கும், விஜயம் செய்திருந்த உள்ளூர், வெளியூர், அங்கத்தினர்களுக்கும், இதர சங்கப் பிரதிநிதிகளுக்கும், மற்ற கனவான்களுக்கும், காரியதரிசி திரு. லெ. அழகுசுந்தரம் செட்டியாரவர்களால் வந்தனம் கூறப்பெற்றுக் கூட்டம் இரவு 9 மணிக்கு இனிது நிறைவெய்தியது.

---



தமிழ் நாடு டாக்கீசாரால் தயாரிக்கப்பட்ட "குலேபகாவலி" என்னும் தமிழ் பேசும் படத்தில் ஒரு காட்சி. இது 22-6-35 சனிக்கிழமை முதல் சென்னை பிராட்வே டாக்கீசில் ஆரம்பம்.

## ராஜா சர். மறுக்கிறார்

### உபசாரம் வேண்டாமாம்

ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்களை சென்றவாரம் கனாடு காத்தான் அரண்மனையில், பலவூர் நகரத்தார் பிரதிநிதிகள் கண்டு ஐரோப்பா சென்று பர்மா சம்பந்தமான தங்கள் குறைபாடுகளை எடுத்துச் சொல்லி நிவாரணம் செய்து வந்ததற்காக நன்றி தெரிவித்தார்கள். அது சமயம் நகரத்தார் சார்பாக கோவிலூரில் ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்த நிச்சயிக்கப் பட்டிருப்பதாகவும் அதற்கு ராஜா அவர்கள் வர வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளப் பட்டபோது அப்படியொரு உபசாரம் தேவையில்லை யென்றும் எல்லோரும் சேர்ந்து ஆங்கில சர்க்காரைப் பாராட்டித் தீர்மானம் நிறைவேற்றுவது பொருந்துமென்றும் கூறியதாக செய்தி.

---

## 'செட்டி நாடு'

### வார மிருமுறையாகும்

காரைக்குடியிலிருந்து வாரப் பதிப்பாக வெளியாகிக் கொண்டிருக்கும் 'செட்டி நாடு' பத்திரிகை ஜூலை மாத ஆரம்பத்திலிருந்து வார மிருமுறையாக வெளியிடப்படுமென்று அறிவிக்கப்படுகிறது.

---

## நாச்சியாபுரம்

அம்மன் கோவிலுக்கு வடபுறமுள்ள கால்வாயில் நகரத்தார்கள் ஆதரவில் பாலம் கட்டி முடித்து சர்விஸ்கார்களும் சொந்தகார்களும் வண்டிகளும் சௌகரியமாகப் போய் வந்து கொண்டிருக்கிறது. பாலம் நல்லவிதமாக கட்டி முடித்து ஜனங்களுக்கு நிரம்ப சௌகரியமாக யிருக்கிறது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.



வெல்லூர் சந்திரபோதி ஸினிடோன் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்ட "சதி அஹல்யா" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி.

கோயம்புத்தூர் செல்லம் டாக்கீஸ் கம்பெனியாரால் தயாரித்த "[illegible]" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில்



சீதையாக நடிக்கும்
ஸ்ரீமதி M. S. ஞானம்பாள்.



இராமனாக நடிக்கும்
மிஸ்டர் A. R. சாரங்கபாணி பிள்ளை.









மணீஸ் மாடர்ன் டாக்கீசால் தயாரிக்கப்பட்ட "நள-தமயந்தி" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் இரு சீன்கள்.



சென்னை அசன்தாஸ் கிளாஸிகல் டாக்கீசாரால் தயாரிக்கப்படும் "பக்த நந்தனர்" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி.



மேற்படி படத்தில் ஒரு ஹாஸ்யப் பகுதி.

# பகீரதன் கடிதங்கள்

லார்டு வெல்லிங்டன்,
டில்லி.

ஐயா,

மகாத்மா காந்தி குவெட்டாவுக்குப் போக அனுமதி கேட்டாரென்றும் உங்கள் சர்க்கார் பாபு ராஜேந்திரர் முதலியவர்கட்குச் சொன்ன பதிலையே அவருக்கு சொல்லி மறுத்துவிட்டார்களென்றும் கேள்விப்படுகிறேன். அது உண்மையாக இருந்து காந்திஜீயை மக்கள் தொண்டாற்ற விடலாகாதென்பது உங்கள் கருத்தாகவுமிருக்குமானால் நிரம்ப நமஸ்காரம். நீங்கள் இந்தியாவிலிருப்பது வரையிலும் அவரை யொன்றும் செய்ய விட்டுவிடக்கூடாது. ஒருகால் குவெட்டவுக்கு போக விட்டுவிட்டால் அங்கு சென்று அந்தக் கள்ளக் காந்தி சொந்தக்காரரின்றிக் கிடக்கும் ஏதேனும் பொருட்களைத் திருடிக் கொண்டு ஓடினாலும் ஓடி விடுவார். அல்லது பூகம்பப் பிரதேசந்தான் காங்கிரஸ் பிரசாரத்திற்கு ஏற்றவிடமென்று பிரசங்கம் செய்தாலும் செய்துவிடுவார். இல்லையானாலும் வரித் தர மாட்டோமென்று ஜனங்களை சொல்ல சொன்னாலும் சொல்லிவிடுவார். நிரம்ப கெட்ட மனிதனல்லவா?

ஒரு கால் நீங்கள் காந்திஜீயை தொத்து நோய்கள் ஏதாவது வந்து பிடித்துக்கொள்ளு மென்று பயந்து அனுமதி கொடாமலிருந்திருந்தால் நிரம்ப நிரம்ப சரி. குவெட்டாவிலுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களை யெல்லாம் விட்டு விட்டு ஒருகால் காந்தியைப் பார்த்து நோய்கள் பிடித்துக் கொண்டாலும் கொள்ளும்.

எப்படியும் காந்திஜீ விஷயத்தில் உங்கட்கு மிகுந்த அக்கரை இருப்பதற்காக பாராட்டு.

—பகீரதன்.

* * *

சர்ச்சில் அவர்கள், எம். பி.
லண்டன்.

அண்ணு,

உங்கட்கு இந்த வாரமும் ஒரு கடிதம் எழுத நினைக்கிறேன். சமீபத்தில் உங்களூர் மந்திரி சபையில் யார் யாரையோ போகச் சொல்லிவிட்டு, யார் யாரையோ புதிதாகவும் மேலும் கீழுமாகவும் போட்டுப் புரட்டினார்கள் என்று கேள்விப்பட்டேன். அதில் உங்கள் பெயரைக் காணவில்லையே? நீங்கள் கத்திய கத்துக்கு ஏதாவது காரியம் நடக்குமென்றல்லவா நினைத்தேன்? சந்திரனைப் பார்த்து நாகவிஸ்தாரம் செய்யும் அந்த பிராணியின் கதிதான் ஆயிற்றோ உங்கட்கு? அட்டா! எவ்வளவு மோசம்! எனக்கு உங்களை நினைக்கும்போதே வருத்தமா யிருக்கிறதே! போகட்டும்; இனியாவது சத்தம் போடாமல் மிதமாகப் பேசுங்கள்.

சமீபத்தில் ஒரு ரோமன் வைத்தியர் ஒரு சிகிச்சா முறையைக் கண்டு பிடித்திருக்கிறார் என்று பத்திரிகையில் படித்தேன். அவர் பொறாமை என்பது ஒரு விதமான ஈரல் நோய் என்றும் அந்த நோயை மருந்தினால் குணப்படுத்தி விடலாமென்றும் கூறுகிறார். கண்ணைப் பார்த்து நோயாளியின் ஈரல் எப்படியிருக்கிறது என்று அவர் கூறி விடுகிறாராம்.

இந்த சிகிச்சா முறையை நினைத்தால் எனக்கு உங்களை அந்த டாக்டரிடம் அனுப்பிப் பரிசோதிக்கலாமோ வென்ற எண்ணம் வருகிறது. உங்கட்கு இந்தியாவென்றால் பாம்பு விஷம்போல் காதிலிருந்து இருதயம் வரையிலும் ஏறுகிறதே. அதுவும் ஒருவித நோயாக விருக்கலாமோ? எப்படியும் இந்தக் கடிதம் கண்டதும் ரோம் செல்லுங்கள். உங்களால் அந்த நோய்க்கு மருந்து கண்டு பிடித்து உலகம் நலம் பெற்றதாகட்டும்.

—பகீரதன்.

* * *

திருவாளர் ஹோர் துரையவர்கள்,
வெளிநாட்டு மந்திரி,
லண்டன்.

மகாப் பிரபுவே,

நீங்கள் சமீபத்தில் இந்திய வைசிராயாய் வரப்போகிறீர்களென்று ஒரு வதந்தி வந்ததின்மேல் உங்களை நேரில் டில்லியில் வந்து சந்தித்து என் வணக்கங்களை பெர்சனலாக (personal) தந்து விடலாமென்று நம்பிக்கொண்டிருந்தேன். ஆனால் இப்போது கிடைக்கும் செய்தியால் நீங்கள் வெளிநாட்டு மந்திரியாக வளர்ந்து விட்டீர்களென்று தெரிகிறது. இந்தியாவில் நிரம்ப சாதித்து முடித்து விட்டீர்களே; ஆதலால் பல தேசங்கட்கு சேர்த்து ஒன்றாக சாதிக்கட்டுமென்று உங்கள் சாகாக்கள் உங்களைப் பது உத்யோகத்தில் நியமித்திருக்கின்றார்கள் போலும். ஆனால் இந்தியாவைப்போல எல்லா நாட்டிலும் உங்கள் பருப்பு வேகுமா வென்பது பார்த்து நிச்சயிக்க வேண்டிய விஷயம். இவாலரா துணிச்சல், மேலை ஆஸ்திரேலியா வேண்டுகோள், கிழக்காப்பிரிக்கா நிலைமை முதலியவைகளை சிந்திக்கையில் கிழவயதில் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்ற கவலை ஏற்படுகிறது. காலமோ யுத்த காலம். சீனாவில் கோர யுத்தம். அபிசீனியாவில் திமிர் பிடித்த உரோம சண்டை. ஐரோப்பிய நாடுகளில் யுத்த உறுமல், தென்னப்பிரிக்காவில் போர்ப்புகைச்சல், எங்கும் ஆயுதம் தயாரிக்கும் ஒலி! இப்படிப்பட்ட தருணத்தில் தாங்கள் மகாத்மியம் மிக்க வெளிநாட்டு மந்திரி பீடத்திற்கு திருவடி எடுத்து வைத்திருக்கிறீர்கள்; அவ்வடி வழுகி விடலாகாதே என்று பயப்படுகிறேன். வழுகி விட்டால் இந்தியா விஷயத்தில் சம்பாதித்த தெய்வீகப் பெயர் சாம்பலாகிப் போய்விடும்.

அது எப்படியாவது போகட்டும். தாங்கள் பெருமதி வைத்து, ஒரு அரசியல் மசோதாவை இந்த நாட்டுக்கு இயற்றி அரங்கேற்றிக் கொடுத்தீர்களே; அதற்காக உங்கள் திருவடி வாழ்க. அந்த பிரபந்தத்திற்கு பதினைந்தரை லக்ஷம் வார்த்தைகளை நீங்கள் உபயோகித்தீர்களென்றும், 25 ஆயிரம் பக்கம் ரிப்போர்ட்டுகளை எழுத்தாளர்கள் எழுதினார்களென்றும், திரு. பட்டலரைக் கொண்டு 600 பிரசங்கங்கள் செய்வித்தீர்களென்றும் ஒரு கணக்கைப் படித்தேன். அடடா என்ன அற்புதம்! கம்பர் காளிதாசன், வான்மீகி, திருவள்ளுவர், புகழேந்திகூட இவ்வளவு சிரமமெடுக்கவில்லை தம் சொந்தப் பிரபந்தங்கட்கு! அப்படியிருக்க, நீங்கள் ஒரு அந்நிய நாட்டுக்காக எவ்வளவு பாஷையை சண்டமாருதம் பண்ணியிருக்கிறீர்கள்! பெரிது பெரிது உங்கள் வள்ளன்மை! அதனால்

தான் நாங்கள் வாழப் போகிறோம். உங்கள் பெருதவிக்கு இரண்டு கப்பல் நிறைய நமஸ்காரம்.

சுயராஜ்யம் கிடைத்ததும் தங்களின் சிலை பொன்றை தகுதியான இடத்தில் நட்டு தகுந்தபடி பூசை செய்வோம். இப்பொழுதே செய்யலாமென்றால் சர்க்கார் உத்தரவு கொடுக்கமாட்டார்கள் போல் தோற்றுகிறது.

அதற்கு முன் உங்கள் சிரமத்திற்கு ஆண்டவன் கூலி தருவானாக.

அன்புள்ள பகீரதன்.



# மகமது நபியைப் பற்றிச் சில

பெண் விடுதலைக்கு முதலில் போராடிய வீரர் யார்?

பொருள் சேர்ப்பது பாபமென்றவர் யார்?

உலகங் காணு சகோதர உணர்ச்சியைப் பெருக்கியவர் யார்?

அநாகரிக ஜாதியாரை உன்னத நாகரிகர்களாக்கியவர் யார்?

ஜூன் 14-ந் தேதி மாலை சென்னை ரேடியோ மூலமாக மௌலானு மௌல்வி அப்துல் ஹக் அவர்கள் மகமது நபியைப்பற்றி ஒரு சொற்பெருக்கை 'பிராட்காஸ்ட்' செய்தார். அப் பிரசங்கத்தின் சாரமாவது:—

மகமது நபி மிக அநாகரிகமான அராபியா தேசத்தில் பிறந்து வளர்ந்து, மிக பிற்போக்கான ஜாதியார்கட்கிடையில், அன்றைய உலகில் இருள் மூடிய ஓர் பகுதியில் அருள்பெற்று உலகை யெல்லாம் மயக்கும் ஓர் பெரும் புரட்சியை உண்டு பண்ணினாரென்றால் மிக மிக ஆச்சரியம். கி. பி. ஏழாவது நூற்றூண்டில் மகமதுநபி உபதேசித்த தத்துவங்களை, நாகரிகம் முதிர்ந்ததென்று புகழப் படுகின்ற இந்த இருபதாம் நூற்றூண்டிலுங்கூட மக்கள் ஆர்வமுடன் வணங்கி வாழ்த்திப் பின் பற்றுகின்றனர். பல தாத்தினர் அதனை மேற் கொள்கின்றார்களெனினும், தாம் முஸ்லீம் மதத்திற்குக் கட்டைப் பட்டவர்கள் என்று சொல்ல அஞ்சுகின்றனர். அந்த ஏழாவது நூற்றூண்டு முதல் இஸ்லாம் உலகில் ஓர் பெரும் சக்தியாக மிளிர்ந்து, பல தாழ்த்தப்பட்ட வகுப்பாரை உயர்த்தும் கருவியாக இருந்து வருவது தோற்றம்.

மகமது நபி போதித்த தத்துவங்கள் பல; அவைகள் யாவும் மன்பதையை ஒன்றாக இணைப்பதற்குப் பெரிய சாதனமாயின.

அவர் போதித்தவற்றில் முக்கியமானது கடவுள் ஐக்கியத்தை நிலை நாட்டுவதும். எல்லாவிதமான விக்காராதனைகளையும் வேரறுப்பதுமாகும். அராபியர்களின் மனதில் அந்தக் கொள்கையை பலப்படுத்துவதற்காக பூமியில் அவர்களது நிலைமை என்ன என்பதை விளக்கிக் கூறினர். ஒரு வைசிராயின் நிலைமை எதுவோ அதுதான் மனிதனின் நிலைமை. எல்லா மனிதரிடத்திலும் அபார குணங்களிருக்கின்றன; அவை அவனை தேவ தூதர்களிலும் மேலானவராக்கி விடும். ஆராய்ந்து பார்த்தால் தேவ தூதர்களே மனிதருக்கு உதவி செய்யத்தான் படைக்கப் பட்டிருக்கிறார்கள். மண்ணில் தோன்றிய பிறவிகளிலெல்லாம் மனிதப் பிறவியே மேலானது. அவனுக்குத்தான் நல்ல அறிவும் கடவுளைநாட சக்தியும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. மனிதனின் வேலை பொம்மைகளின் முன்பும் இயற்கைப் பொருட்களின் முன்பும் தலை தாழ்த்தி வணங்குவதல்ல. இயற்கையை அடக்கி எவற்றையும் ஆளுவதே அவனது வேலை. மகமது நபி எங்கும் கடவுளின் ஆட்சியையும் (அரசத் தன்மையையும்) மனிதனின் பிரதி நிதித்துவத்தையும் (வைசிராய் ஸ்தானத்தையும்) வற்புறுத்தி வந்திருக்கிறார்.

நபி செய்த மற்றொரு சிறந்த வேலை மக்களுக்குள் ஐக்கியத்தை நிலை நாட்டி சமத்துவத்தை ஏற்படுத்துவதாகும். இஸ்லாத்தில் ஜாதியாவது வகுப்பாவது உயர்வு தாழ்வு முறையாவது கிடையா. பிறப்பினாலோ ஆஸ்தியாலோ ஏற்றத் தாழ்வுகளுமில்லை. நிறவேற்றுமை, நாடு பற்றிய பேதம் ஆகியவும் வேரற ஒழிக்கப்பட்டன. சுருக்கத்தில் அவர் ஒரு புதிய சமூகத்தைப் படைத்து, அதன் கடமைகள் மக்கட்கும் கடவுளுக்கும் தொண்டு செய்வதென்று கட்டளையிட்டார். அவரது கட்டளைகளெல்லாம் வெறும் பேச்சாகவே இருந்துவிடவில்லை. எதை அவர் கூறினாரோ அது செயலிலும் காண்பிக்கப்பட்டது.

மகமதுநபி பொருளாதார சம்பந்தமான ஒரு புரட்சியையும் விளைவித்தார். ஒரு சகோதரன் பணம் தேவைப்பட்டானென்பதை சாதகமாகக்கொண்டு, அவனை பயன்படுத்திக் கொள்ளும் கொடுமதியை அழித்தார். பணம் கடன் கொடுத்து வட்டியம் பெறுவது சமூகத்திற்குப் பாவம் செய்வதும் சகோதரத்துவத்திற்கு துரோகம் செய்வதுமாகுமென்று போதித்தார். இப்போதனை இன்றேல் பணத்தால் உயர்வுதாழ்வு ஏற்பட்டு, புதிய ஜாதிகள், வகுப்புகள், பேதங்கள் முளைத்து விடக்கூடும். மேலும் நபி பணம் சேர்ப்பது பெரிய பாதகமென்று சொல்லி அதனை ஏழைகட்குப் பகுத்துக் கொடுத்துவிடும் சில முறைகளைக் கற்பித்திருக்கிறார்.

மகமதுநபி செய்த மற்றொரு அற்புதம் பெண்கட்கு ஆண்களைப்போல சமநிலை அளிப்பதாகும். உலகம் முழுதும் பெண்களையொரு தாழ்ந்த வகுப்பு என்று கருதுகையில் நபி மட்டிலுமே அவர்களை சம அந்தஸ்துடையவராகப் பாவித்திருக்கிறார். இந்த ஒன்றே இஸ்லாம் மதத்தின் பெருமைக்குப் போதுமானதாகும். ஆனால் காலக் கொடுமையால் முஸ்லிம்கட்கிடையே சில தப்பு எண்ணங்கள் தோன்றி பெண்கள் நிலைமையை மோசமாக்கியிருக்கிறது. உலகில் எந்த மதபோதகரும் கொடாத சொத்துரிமையையும் கல்யாண உரிமையையும் விவாகரத்து உரிமையையும் பெண்கட்குக் கொடுத்திருக்கிறார் மகமது நபி. அவரே பெண் உயர்வுக்குப் போராடிய ஆதிகாலத் தலைவர் என்று சொல்லலாம்.

அடுத்தபடியாக ஒரு ஜனசமூக மதத்தைத் தோற்றிய நபி மதுபானத்தை அழித்து கல்வியை வளர்த்தார். அவரது போதனைகளால் உலகிலேயே பிற்போக்காளாயிருந்த அராபியர்கள் உலகில் மேலான அறிவுச் சுடரைத் தாங்குபவராகி விட்டார்கள் என்பது விளக்கு.

# காங்கிரஸும் பிற ஸ்தாபனங்களும்

—(●)—

## ஜஸ்டிஸ் கட்சி தனித்தியங்க வேண்டுமா?

—:(●):—

('புஷ்பம்')

நான் சென்றவாரம் காங்கிரஸ் மகாசபை மகாத்மா காந்தி, பாஞ்சால சிங்கம், திலகர் மகாரிஷி, தாதாபாய் நவரோஜி, சி. ஆர். தாஸ், ஜவஹர் சிங்கம் போன்ற பெரியார்களால் தண்ணீர் வார்க்கப்பட்டுப் போற்றப் பெற்றதென்று சொன்னேன். இன்னும் அதற்கிருக்கும் பெருமை அளவிட முடியாதது. வெளி நாடுகளில் இந்தியாவைப்பற்றி எவ்வளவு தெரியுமோ அவ்வளவு தெரியும் காங்கிரசைப் பற்றியும். இன்று இந்தியாவுக் கிருக்கும் பெருமைகளில் ஒன்று காங்கிரஸ் நடத்தும் போராட்டமாகும். இந்தியாவிலிருந்து வெளிநாடு செல்கின்ற ஒருவர் காங்கிரஸ் அங்கத்தினர் அல்லது காங்கிரஸ் பிரதிநிதி என்று கூறினால்தான் பெருமை.

ஒரு பெரிய தேசம் முழுதும் சேர்ந்து நடாத்தும் பெரிய சபைக்கே காங்கிரஸ் என்று சாதாரணமாக வழங்கப்படுகிறது. அமெரிக்கர்கள் பதினெட்டாவது நூற்றாண்டில் ஆங்கிலேயர்களைத் துரத்தி யடித்தபோது அவர்கட்கு (அமெரிக்கர்கட்கு) முக்கிய போராட்டக் கருவியாக இருந்தது காங்கிரசே. அடிக்கடி அமெரிக்கர்கள் அக்காங்கிரசைக் கூடி தாங்கள் வெள்ளைக்காரர்களிடம் எவ்விதத்தில் நடந்துகொள்ள வேண்டும் என்று யோசித்தார்கள். அந்த யோசனைதான் அமெரிக்கரை ஐக்கியப்படுத்தி வெற்றியை அளித்தது. எனவே அமெரிக்காவில் காங்கிரசை பொது ஜனங்களின் வாய் என்று சொல்லலாம்.

இதேமாதிரி பல தேசங்கள் காங்கிரஸ் மகா சபைகளை அமைத்திருக்கின்றன. பாஷை மாற்றத்திற் கொத்த வண்ணம் அவற்றின் பெயர் மட்டிலும் சிற்சில இடங்களில் மாறி யிருக்கின்றது. ருஷ்யர்கட்கு ஒரு பெரிய காங்கிரஸ் மகாசபை உண்டு. அதற்கு ருஷ்ய பாஷையில் வேறு பெயரிருந்தாலும் ஆங்கிலத்தில் சொல்லும்போது காங்கிரஸ் என்றே கூறுகிறார்கள். அச்சபை தான் பொதுவுடமை திட்டங்களையும் அரசியல் ஆக்கங்களையும் வகுப்பது.

இவ்வாறு எல்லா தேசங்கட்கும் பொது ஸ்தானமொன்று இருப்பது போல இந்தியாவுக்குமொன்று இருப்பது பெருமையும் பொருத்தமுமன்றோ? எனவே நாம் ஏன் அந்த காங்கிரஸ் மகாசபையில் உறுப்பினராகக் கூடாது. பொதுஜன ஸ்தாபனத்தின் உறுப்பினரானல் நாம் தேசத்தோடு ஒட்டிவாழ விரும்புகின்றோமென்பது கருத்து அன்றோ? அந்த



வாத்தியார் :—ஏன் பனி பெய்கிறது என்று ஒருவனுக்காவது தெரிந்தால் கையை தூக்கலாம்.

கோபன் :—என்ற பய்யன் மாத்திரம் கையை ஒரு முழம் நீளம் நீட்டினான்.

வாத்தியார் :—என்ன சொல் பார்ப்போம் ?

கோபன் :—பூலோகம் 24 மணி நேரம் வேகமாகச் சுற்றுவதால் உடம்பு வேர்த்து பனியாக பெய்கிறது.

கைய கருத்துக்குத் தானே தேசாபிமானம் என்றும் பெயர்! ஆனால் காங்கிரஸ் அங்கத்தினரல்லாதவரை தேசாபிமானமற்றோர் என்று கருதினும் தவறாகுமோ?

காங்கிரஸ் மகாசபை தேசத்தின் ஏக ஸ்தாபனமாயிருக்க இதர சிறிய ஸ்தாபனங்கள் தலைகாட்டியிருக்க வேண்டிய அவசியமில்லை. மாபெரும் சபையொன்றிருக்க குட்டி சபைகள் எதற்கு? ஏதேனும் ஒருவரிருவருக்கு வேறுபட்ட கருத்திருக்குமாயின் அவர்கள் அக்கருத்தை காங்கிரசில் எடுத்துக்கூறி தம் வழிக்கு அதனைத் திருப்பிக் கொள்ள முடியவேண்டும். காங்கிரஸ் எவர் கூறுவது சரியாயினும் அதனை ஏற்றுக்கொள்ளும். மாறுமல் அசைமல் அப்படியே இருக்கவேண்டுமென்பதோ நியாயத்திற்கு செவிசாய்க்கலாகாதென்பதோ அதன் லக்ஷியமல்ல. தேச நலத்திற்காக அமைந்திருக்கும் ஒரு ஸ்தாபனம் தேச நலம் பயக்கும் விஷயங்கட்கு செவிசாய்க்கா திருக்குமா?

எவரேனும் சிலர் "காங்கிரஸில் கெட்டவர்கள் இருக்கின்றார்கள்; எனவே நாங்கள் சேரவில்லை" என்று கூறுவார்களாயின் அதுவும் தவறேயாகும். ஏன் அவர்கள் அப்பெரும் சபை முன் தோன்றி கெட்டவர்களின் கண்ட வாளங்களை எடுத்து வெளியிடலாகாது? கெட்டவர்களை தேசத்தின் மாபெரும் ஸ்தாபனமாகிய ஒரு சபையில் வைத்துவிட்டு சும்மா வெளியே கிடந்து கத்துவது ஆண்மையா!

கொள்கை வித்தியாசம் பற்றி நோக்கினும் காங்கிரஸில் சேர்ந்து தம் கொள்கையை எடுத்து சொல்லியாக வேண்டும். பண்டித ஜவஹர், சுபாஷ் பாபு போன்ற அநேகம் வாலிப வீரர்கட்கு நாட்டில் அபேதவாத ஆட்சி நடைபெறுவதைப் பார்க்க வேண்டு

மென்பது ஆசை. அப்படிப்பட்டவர்கள் என்ன செய்தார்கள்? காங்கிரசை விட்டு ஓடிவிட்டார்களா? இல்லை. அதிலேயே இருந்துகொண்டு தம் கக்ஷிக்கு ஆதரவைப் பெற முயற்சிக்கிறார்கள். நல்ல அஸ்திவாரமும், நல்ல செல்வாக்கும், நல்ல பலமும் உடைய காங்கிரஸ் என்னும் கருவி கையில் கிடைத்துவிட்டால் அடுத்த நாளையில் நாட்டில் மாபெரும் காரியத்தை செய்துவிடலா மென்பது அவர்கட்குத் தெரியும். போராட்டவன்மையும் தியாக சிந்தையும், பொருந்தன்மையும் பழக்கமுமுடைய அதனை (காங்கிரசை) விட்டு விட்டு புதிதாக ஒரு ஸ்தாபனத்தைத் தேடுவதுதான் புத்திசாலித்தனமா? எனவே நாட்டில் தமக்கு சரியானது, நாட்டுக்கு நலம் பயப்பது என்ற கொள்கையை மனமாரக் கொண்ட எந்தக் கட்சியாரும் காங்கிரசில் தம் கொள்கைகளைக்கூற முன் வருவதே மேல்.

"இந்தியாவில் பல சபைகள் இருக்கின்றன" வென்று வெளிநாட்டார் தெரிவதைவிட "சக்தியுடைய ஒரு ஸ்தாபனமேஇருக்கிறது" என்று அறிவது மதிப்புடையதன்றோ?

ஆதலால் ஜஸ்டிஸ் கட்சியார் போன்ற குட்டிக் கட்சிகள் காங்கிரஸ் என்னும் மாபெரும் ஜோதியில் லயமாகி விடுவதே தகுதி. ஆனால் அந்தோ! ஜஸ்டிஸ் அத்தகைய தூயசிந்தை படைத்ததல்ல. 'பார்ப்பனரல்லாதார் நலம்' என்ற பசுத்தோலைப் போர்த்திக் கொண்டு, உண்மையில் புலியாக இருக்கிறது. அதன் உடம்பு ஆசகலம் விஷம் நிரம்பியிருக்கிறது. அதில் ராஜாக்கள், ஜமீந்தார்கள், முதலாளிகள், லக்ஷாதிபர்கள் ஆகியோரே இடம் பெற்றிருக்கிறார்கள். பட்டம் பதவிகளைப் பெறவும், உத்தியோகங்களை அடையவும், தம் ஆஸ்தியையும் நிலைமையையும் உறுதி செய்து கொள்ளவும் செய்வதே அவர்கள் ஆசை. அவர்கட்கு வறுமை இல்லாததால் பசி என்பது என்னவென்றுகூட தெரியாது. சகல வசதிகளுமிருப்பதால் கஷ்டத்தை அறியார்கள். சர்க்கார் ஒன்றுடன் மட்டும் சம்பந்தம் மிகுவதால் குடியானவர்கள் உண்மை நிலைமை தெரியாது. எவரோ சிலர் உழைத்து நெல்லையும் பணத்தையும் வீட்டில் கொண்டு கொட்டுவதால் விவசாயிகள் சிரமம் அவர்கள் புத்திக்கு புலப்படாது, அவர்கள் விருந்து நடத்துவது, பிரயாணம் செய்வது, மாலை வாங்குவது, நடனம், நாடகம், கச்சேரி இவைகளில் பங்கு கொள்வது என்பவற்றைத்தவிர இதர வேலைகள் எதையும் செய்யார். பெருமபான்மையும் உத்யோக மஞ்சத்தில் உறங்குவதே ஜஸ்டிஸ் கட்சியின் வாழ்க்கை. அதில் வெளியிலிறங்குவார் எவருமில்லை. தொண்டர்கள் யாரும் கிடையாது. தலைவர்கள் - தாமுண்டு. சரியான அமைப்போ கிளைகளோ நடைமுறைகளோ கிடையா. செருப்பு மழை பொழிந்த தஞ்சாவூர் ஜஸ்டிஸ் மகாநாட்டின் பொது மந்திரிகளும் மற்று சில தலைவர்களும் பணம் கொடுத்து டெலிகேட்டுகளை ஆயிரக் கணக்கில் கொணர்ந்து மகா நாட்டுப் பந்தலை நிறைய அடித்தது சந்து தெரிக்க செயல். அந்தச் செயலொன்றினாலேயே ஜஸ்டிஸ் அமைப்பின் லட்சணம் புரிகின்றது. மந்திரி பதவிக்கு அன்று சிலர் பட்டபாட்டை யோசித்தால் ஜஸ்டிஸ் கட்சியின் நோக்கமென்ன வென்பது மகாமேருமலை மேல் போட்ட மின்சார தீபம்போல் தெரியும்.

இந்த ஜஸ்டிஸ்கட்சியார் வெளியே பிரகடனம் செய்யும் தத்துவங்களில் ஒன்று பார்ப்பனரல்லாதார் உரிமை பேணுதலென்பதாகும். எவர் செய்த தவத்தினாலோ இந்த ஒரு வாதமும்சுற்று நியாயமாக வாய்த்துவிட்டது. தென்னாட்டு பிராமணர்களால் பிராமணரல்லாதார் அழுத்தப்படுகின்றார்கள் என்பது உண்மைதான். அதனை காங்கிரஸ்காரர்கள் ஒப்புக்கொள்ளாமலில்லை. ஒரு காலத்தில் சென்னையில் பேசியபோது மகாத்மா காந்தியே, "நான் வந்து உங்கள் பிராமணரல்லாதார் கக்ஷியை நடாத்துகின்றேன்" என்று கூறினர். நாட்டில் பெண்களை முன்னேற்றுவிக்க வேண்டுவது எவ்வளவு தேவையோ, ஹரிஜனர்களை முன்னேற்றுவிக்க வேண்டுவது எவ்வளவு அவசியமோ, பல மூடப் பழக்கங்களை ஒழிக்க வேண்டுவது எவ்வளவு வேண்டுவதோ அவ்வளவு முக்கியம் பிராமணர்கள் கொடுமையை ஒழித்து பிராமணல்லாதாரை முன்னேற்றுவது. என்பதற்காக ஜஸ்டிஸ் கட்சியார் காங்கிரசைவிட்டு ஓடிவிடவேண்டு மென்பதில்லை. ஆராய்ந்து பார்த்தால் தந்நலம், தியாகமின்மை, கொள்கையிலிருக்கும் பொத்தல் ஆகியவற்றினாலேயே ஜஸ்டிஸ் கட்சியார் காங்கிரசில் சேர்கின்றார்களில்லை. அவர்கள் நடுநடுங்குவதும் தம்மிருதய களங்கத்தினால்தான். தங்களின் பலவீனத்தைத் தெரிந்திருப்பதினால் தான் காங்கிரசில் தப்பு இருப்பதாகக் கூறி திட்டுகின்றார்களே யன்றி வேறில்லை. தம் கக்ஷியில் நியாயமான திட்டங்கள், கொள்கைகள், அனுஷ்டானங் களிருந்திருந்தால் தைரியமாக அவற்றை எடுத்துக்கூறி வசவை விடுவார்களன்றோ? அவ்வாறு கூறாது காங்கிரஸ் குறைகளையே சொல்





வது தம் கக்ஷி பலக்குறைவினால்தான் என்பது வெள்ளிடைமலை.

### காங்கிரஸ் வேலை

மேற் கூறியவாறு மாபெரும் பெருமை படைத்த காங்கிரஸ் மகா சபை வெள்ளைக்காரர் சர்க்காரோடு போராடுவதில் ஈடுபட்டிருக்கிறது. காரணம் நாட்டுக்கு நலம் செய்யவேண்டு மென்ற ஏக உத்தேசமேயாகும். பிரிட்டிஷார் இந்நாட்டை ஒரு அமைப்பின் கீழ் ஆளத்தொடங்கி சுமார் 150 வருடங்கட்கு மேலாகி விட்டன. அந்த 150 வருட ஆட்சி முறையின் பின்னரும் ஏற்பட்ட பலனென்ன வென்றால் சென்ற வாரம் பர்மா பத்திரிகை யொன்றில் ஒரு ஐரோப்பிய சட்டசபை மெம்பர் அடியில் வருமாறு எழுதுகிறார்: இந்தியாவில் நிரந்தரமாக ஆறு கோடி மக்கள் வேலையில்லாது திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். கோடிக் கணக்கான மக்களில் நூற்றுக்கு 8 விகிதம் பேரே எழுதப் படிக்கத் தெரிந்திருக்கிறார்கள். பலருக்கு வீடில்லை—வாசலில்லை; நிலமில்லை. அரை வயிற்றுக் கஞ்சிக்குக் கூட கதியற்று அலைகிறார்கள் லக்ஷக் கணக்கில். நாயுண்ணும் எச்சிலை விழைந்து, நாயோடு போட்டி போடுகின்றனர் அநந்தம் பேர்! இந்த அநியாயத்தை எந்த நாட்டிலுங் காண முடியாது. சர்க்கார் இந்த ஈனவாழ்வை யொழிக்க முயல்கின்றார்களில்லை; சுகாதாரப் பிரசாரம் செய்கின்றார்கள்! என்னே இந்தியர் தலை விதி!

இந்தியனின் சராசரி வருமானம் ஒரு அணா ஆறு பை என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

இனி ஹரிஜனர் என்ற ஒரு வகுப்பார் முன்னிருந்த மாதிரியாகவே இருந்து வருகின்றார்கள். அவர்கட்கு கல்வி கிடைக்கவோ, குளம், கிணறு, ஆலயம் முதலியன பொதுவாகவோ எந்த சட்டமும் இயற்றப்பட்டதாகக் காணோம். தரிசாக இருக்கும் நிலங்கள் அவர்கட்குக் கிடைக்கும்படியாகவாவது சர்க்காருத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாக அறியோம். ஆனால் நாட்டில் அவசர சட்ட ஆட்சி நடைபெறுகிறது. நாட்டு தங்கமெல்லாம் வெளியே செல்கிறது. அதேபோது கடன் சுமை அதிகப்பட்டுக் கொண்டிருக்கிறது. 1900-ம் ஆண்டில் தேசக் கடன் ஒரு கோடி பவுனுக இருந்தது. இப்பொழுது 180 கோடி பவுனுக உயர்ந்துவிட்டது. ஏழை இந்தியன் நசுக்க இதைவிட வேறு சுமை வேண்டியதில்லை. ஒரு காலத்தில் நெசவுத் தொழில் சிறப்புற்றிருந்தது; இதர பல கைத்தொழில்களும் செழித்திருந்தன. இப்போது எல்லாம் கண்ணேடு மண்ணாய் மாண்டுமடிந்து மட்டமாய்ப் போய்விட்டன. அதேபோது ஒரு காலத்தில் இந்திய மிலேச்சர்கள் என்று புறக்கணித்து வந்த விதேசியர்கள் நமக்கு கைத்தொழில் பொருள்கள் அளிக்கின்றனர்; புத்தி கூறுகின்றனர்; தலையில் மிதிக்கப் பார்க்கின்றனர். இந்த விளைவெல்லாம் வெள்ளைக்காரர்கள் தற்பொழுது ஏற்படுத்தியிருக்கும் ஆட்சி முறையினால் என்பது காங்கிரசின் கருத்து.

### சுதந்திரம் பிறப்புரிமை

ஆகவே, காங்கிரஸ் புழுத்துப்போன அவ் ஆட்சிமுறையை மாற்றி தன்னைத் தானே ஆளப் பார்க்கிறது. இதில் தவறோ தகாத செயலோ ஒன்றுமில்லை. ஒரு மனிதன் இன்னொரு தேச மனிதனால் ஆளப்படுவதைப் போல அவ

மானம் வேறொன்றில்லை. அவ்வாறு அடிமைப்பட்டு உயிர்வாழும் மனிதன் உயிர்தாங்குவதைவிட சாவதே மிகவும் மேல். சுதந்திரம் என்பது மனிதனின் உயிர். அது உடன் பிறப்பு; எல்லோருடையவும் உரிமை. சுதந்திரத்தை நாடாத உயிர்களும் அதற்காகத் தவிக்காத ஜந்துக்களும் அதில் இன்பம் காணாத பிராணிகளும் உலகிலெங்கணுமில்லை. ஒருகால் இங்கிலாந்தில் இருக்குமோ என்னவோ? எனவே இந்தியர் சுதந்திரமாக ஆண்டு உண்டு களித்து நலம்பெருக்கி வாழ விரும்புகின்றனர்.

இப்படியே தான் வாழ ஆசைப்படுகின்றனர்; ஆசைப்பட்டனர் ஆங்கிலேயரும்! ஒரு காலத்தில் அவர்களை ஆண்ட அரசர்கள் யதேச்சாதிகாரமாக எதுவும் செய்து ஜனங்களை மதியாது சட்டம் புரிந்து வாழலானார்கள். அதனால் ஜனங்களின் இன்ப வாழ்வு பாதிக்கப்பட்டது; வயிறு வாடலாயிற்று. ஆதலால் நிரந்தரமாகக் கிளர்ச்சி செய்து, ஆயுதம் தாங்கி, அரசனை அச்சுறுத்த ஆரம்பித்தனர்; எனவே ஜான் என்ற அரசனொருவன் கீழ்ப்படிந்து ஒரு உரிமை பத்திரமெழுதிக் கொடுத்தான். சார்லஸ் என்ற ஒரு அரசன் வெட்டுண்டு இறந்து பட்டான். ஜேம்ஸ் என்ற மற்றொரு அரசன் இரவிலேயே ஐரோப்பாவுக்கு ஓடிப்போனான். இப்படி ஆங்கில ஜனங்கள் வாளேந்தி அரசர்களோடு போர் செய்த தருணங்கள் பலப்பல. அப்படியே தான் நிகழ்ந்திருக்கிறது பல தேசங்களிலும். இந்தக் கதைகள் ஆங்கிலேயருக்குத் தெரியாததல்ல. அவர்களிடம் ஒரு வியாசம் எழுதச் சொன்னால் அல்லது பிரசங்கம் செய்யச் சொன்னால் மகாமேரு அளவு சுதந்திரம் பேசுவார்கள். நம்மைப்போல் ஆயிரம் பங்கு சரித்திர மேற்கோள்கள் காட்டி வாய் வீச்சு வீசுவர். ஆனால் பாரதியார் கூறியவாறு "ஊடகத்தே கிணற்றோரத்தே காதலென்றால் குமுறுவார்." அதாவது இந்தியா சுதந்திரம் கேட்கின்றதென்றால் வயிறெரியும். அந்த விடத்தில் மட்டிலும் தன்னலம் தாண்டவமாட, தத்துவ போதனைகளெல்லாம் பறந்து போய்விடும். இது எவ்வளவு அநீதி? மனிதத் தன்மைக்கு ஒத்ததா? அவர்கள் மட்டிலும் சுதந்திரர்களாய் வாழ வேண்டும்; நாம் மட்டிலும் அவர்கட்கு அடிமைகளாயிருக்கவேண்டுமென்றால் எவ்வாறு ஒப்புக்கொள்வது? அப்படிப்பட்ட ஆங்கிலேயர் உலக நன்மைக்காக சர்வதேச சமரச இயக்கம்தொடங்குவதென்றால் உலகம் எப்படி ஏற்றுக்கொள்ளும்! முசோலினி போனவாரம் ஆங்கிலேயர்கட்கு அறிவுச் சூடு கொடுத்தது அதுபற்றியன்றோ?

இத்தகைய ஆங்கிலேயர் நம் சுதந்திரக் கக்ஷியை எடுத்துக்கூறவும் சம்மதிக்கின்றார்களா? மகாத்மா காந்தி பேட்டி வேண்டுமென்று பன்முறை எழுதினால் லார்டு வெலிங்டனுக்கு. அவர் கண்டு பேச மறுத்து விட்டார். ஒரு பெருந் தேசத்தலைவரை—தேசோத்தாமரை—உலக குருவை—சாத்வீக மூர்த்தியை—சமாதான ரக்ஷகரை—கருணையங்கடலை—பிறர் பொருட்டு தம்மை வாட்டும் வள்ளலை—நம் சொந்ததேசத்திற்கு வந்திருக்கும் ஒரு அதிகாரி கண்டு பேச மறுத்து விட்டாரென்றால் என்னென்போம்! என்னென்போம்!

நாம் நம் சுதந்திரத்தை அழிப்பவரிடம் வெள்ளைக்காரர்கள் செய்தது போல ஆயுதந்தாங்கி போராடவில்லை. ஆயுதமெடுத்துப் போராடுவது—தம் முடம்பில் வலி யில்லாதபோதாகும் உடல் பலம் இருப்பவர் ஆயுதத்தை நாடார். மிருக பலமாகும் ஆயுத பலம். மனித சக்தியுடையோருக்கு ஆன்ம பலமுண்டு. ஆன்மபலம் அளவற்றது எல்லையற்றது அதனை ஜயிக்க எவராலும் ஏலாது. உலகில் மிக நாகரீகம் பெற்றோரோ ஆன்ம சக்தியை உபயோகிப்பர். இயேசுநாதர், மகமது நபி, புத்தர், ஜெயினர் போன்ற புரட்சிக்காரர்களெல்லாம் ஆன்ம பலத்தினாலேயே போராடினர். ஆதலாலேயே அழியாப் புகழும் அடங்காப் பெருமையும் கொண்டிருக்கின்றனர் அவர்கள். அதேபோல நாமும் ஆன்மசக்தியால்—சாத்வீகத் தன்மையால்—போராடுகிறோம். நம் போராட்டத்தால் நம் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்பதோடு ஆங்கிலேயர்களின் கொடுங்குணத்தையும் தூய்மை படுத்த வேண்டுமென்பது மகாத்மா காந்தியின் ஆசை.

---

**காங்கிரஸையே**

**நாடுங்கள்!**

---

### வைட்டமின் "ஏ"

பெட்டைக் கோழிகளுக்கு, கோதுமை, பார்லீ, ஓட், கம்புபோன்ற தானியங்களின் இளந் தளிர்களை மட்டும் ஆகாரமாகக் கொடுத்தால், அவைகள் அதிக முட்டைகளிடுவதுடன் அந்த முட்டைகளில் "ஏ" வைட்டமின் இருப்பதாக டாக்டர் ஸி. எப். ஷூக்பெல் கூறுகிறார்.

---





# உடம்பு பொன்னிறமாக வேண்டுமா?

## வெங்காயத்தின் விசேஷம்

### மகோதரம் மாய மாண்புள்ள மருந்து

விழுங்கிடில் வெங்காயம்
வேண்டிய மட்டிலும்
புழுங்கித் திரிவர்
பொல்லா வைத்தியர்

என்பது பண்டைக் காலம் முதல் வழங்கப்பட்டு வரும் ஒரு ஆங்கிலப் பழமொழி. "இன்று புதுமையாகத் தோன்றினும் பன்னூறாண்டுகளாய் வெங்காயம் பொன் போல் பாவிக்கப் பட்டு வருகிறதென்பதற்கு ஆட்சேபமில்லை" என்று "New Health" என்னும் ஆங்கில சஞ்சிகையில் எழுதுகிறார் டாக்டர் எட்வார்டு M. D.

#### எகிப்தியர் உபயோகம்

பூர்வீக எகிப்திய நாடு மேனாட்டின் வழிகாட்டியாகவும், சாஸ்திர ஆற்றுகவுமிருந்ததன்றோ? அந் நாட்டில் வெங்காயத்திற் கிருந்த மதிப்பு மிகவாம். பண்டித இலியட் என்பவர் எகிப்திய மம்மிகளை (பக்குவம் செய்யப்பட்ட பிணங்களை)ப் பரிசோதனை செய்தபோது, அம்மன் எனும் கடவுள் அர்ச்சகர்களின் உடல் அடைக்கப் பட்டிருந்த பெட்டி ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வெங்காயம் விகிதம் வைக்கப் பட்டிருந்ததைக் கண்டாராம். அப்படி 14 பிணங்களில் கண்டாரென்று அவர் கூறுகிறார். அப்பால் ஒரு மம்மியைப் பார்த்தபோது ஒரு வெங்காயம் நசுக்கப் பெற்று காதோடு ஒட்டிவைக்கப்பெற்றிருந்ததாம்.

மூன்றாவது பாரோ ராமசெஸ் அரசனின் (Pharoah Rameses III) மம்மியைப் பரிசோதித்தபோது, கண் குழிகளில் செயற்கைக் கண்கள்போல் தோற்றும் படியான நிலைமையில், இரண்டு வெங்காயங்கள் வைக்கப் பட்டிருந்தன வென்று சொல்லப் படுகிறது. பெரியார் ராமேசஸின் (Rameses the Great) உடம்பை நோக்கிய போது இடது கைக் குழியில் ஒரு வெங்காயம் இருந்ததாம்.

---

துளசி செடி நிற்குமிடத்தில் மலேரியா கொசுக்கள் வருவதில்லை. துளசி சாற்றை மிளகுப் பொடியுடன் கலந்து குடிப்பார்க்கு மலேரியா ஜுரம் நீங்கும். துளசி இலையை எலுமிச்சம் பழ ரசத்துடன் சேர்த்து அரைத்துப் பூசினால் சொறி, சிரங்கு, காப்பன் முதலியன அகன்றுவிடும். ஸ்நாநம் செய்யும் போது மேற்படி அரையிலை உடம்பில் பூசிக் குளித்துவந்தால் உடம்பிலுள்ள கரும் புள்ளிகள் ஒழிந்து வசீகாமுண்டாகும். காய்ந்துலர்ந்த துளசி இலையை பொடி பண்ணி மூக்குத் தூளாய் உபயோகித்து வந்தால் பீனிசம் முதலிய நோய்கள் பறக்கும். காது குத்துக்கு இரண்டொரு துளி துளசிச் சாற்றை காதில்விட நோய் நீங்கும். வாந்தி, ஒக்காளம் ஆகியவற்றிற்கு துளசிச் சாற்றில் மிளகுப்பொடியைத் தூவிக் கொடுக்க உடன் நிற்கும்.

* * *

பாம்பு கடிக்கும் துளசி சிறந்த ஔஷதமாகும். பாம்பினால் தீண்டப் பட்டவர்க்கு மென்று தின்றுவிழுங்கச் சில இலைகள் உடனே கொடுத்தல் வேண்டும். துளசிவேரை வெண்ணெயுடன் சேர்த்துப் பசையாய் அரைத்துத் தீண்டிய இடத்திற் பூசவேண்டும். வெண்மை நிறம் உள்ள அப்பசை நீல நிறமானவுடன், அதனை அகற்றி மீண்டும் அதேயிடத்தில் துளசிவேர்ப் பசை முன் சொன்னபடி அரைத்துப் பூச வேண்டும். இப்படியே செய்துவர நஞ்சு முழுவதும் பசையின் மூலமாக வெளிவரும்.

---

ஹெரொடோட்டஸ் என்ற பெரிய சரித்திராசிரியர், "பிரமிட் (கூர்நிதிக் கோபுரங்கள்—Pyramids) கட்டப் பட்ட காலையில் தொழிலாளிகள் ஏராளமான வெங்காயத்தைத் தின்றழித்தார்கள்" என்று எழுதியுள்ளார்.

பூர்வீக எகிப்து வைதீக-வைத்தியர்களும் அதிகமான வெங்காயத்தை உபயோகித்தார்கள் என்று சொல்லப் படுகிறது.

சூலை நோயால் கட்டி ஏற்பட்டு மூட்டுகள் வேதனை கொடுக்கையில் கொழுப்புடன் வெங்காயத்தைப் பூசி (use as plaster) தணிக்கப் பட்டதாகப் பழைய நூல்கள் சொல்கின்றன. வயிற்றுப் போக்கால் உடல் கழிவு ஏற்பட்ட காலையிலும் பூர்வீக மக்கள் வெங்காயத்தையும் கொழுப்பையும் கலந்து கொடுத்து வந்தார்கள் என்று நினைக்க விடமிருக்கிறது.

உடம்பின் நிறம் குன்றிய காலையில் வெங்காயத்தை ஒயினில் (Wine) சமைத்து சாப்பிட்டு நலமடைந்ததாகத் தெரிகிறது. சர்மத்தில் ஏற்படுகின்ற நோய்கட்கு—பெரும்பான்மையும் நிறத்தில் ஏற்படுகின்ற மாற்றங்கட்கு—சந்தனம், வெங்காயம், ஒயின் ஆகிய மூன்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

ஈறில் ஏற்படும் புண்ணுக்கு (Sore gums) தண்ணீரில் வெந்த வெங்காயம் நலமென்பது நெடுநாளைய சித்தாந்தம்.

#### கிரேக்கர்கள்

இவ்வாறு எகிப்தியர் வெங்காயத்தை உபயோகித்து வந்தது போலவே கிரேக்கர்களும் அதனைப் போற்றி உபயோகித்துவந்ததாக அறிகிறோம். கிருஸ்துவுக்குப் பின்பு இரண்டாவது நூற்றாண்டில் வைத்தியர்கள் உபயோகித்து வந்த பக்குவங்களில் இரண்டு நமக்குக் கிடைத்திருக்கின்றன.

(1) மூக்கிலிருந்து இரத்தம் வடிதலைத் தடை செய்வதற்கு கோடரசத்தை வெங்காயச் சாற்றில் கலந்து மூக்கினுள்ளில் தடவுதல்.

(2) காது நோவுக்குச் சூடான வெங்காயச் சாற்றினால் காதைக் கழுவுதல்.

பிரபல கிரேக்க வைத்திய நிபுணராகிய டாக்கோரிடல் என்பவர் எண்ணெயில் தயாரித்த வெங்காயத்தை மூலநோய்க்கும், தேனில் தயாரித்த வெங்காயத்தைக் கண் நோய்கட்கும் ஔஷதமாகச் சொல்கிறார். நாய் கடிக்கு காடியுடன் (Vinegar) வெங்காயத்தை உபயோகிப்பது நலமாம்.

### செவிக் கோளாறுக்கு

உரோம வைத்தியர்களில் மிகப் பெரியவராகிய காலென் என்பவர் செவி கேளாமல் போகும்போது வெங்காயத்தை உபயோகிக்க வேண்டுமென்கிறார். அவர் செவி கேளாது போகையில் காதில் எண்ணெயை நிரப்பி, அதில் வெங்காயத்தின் உட்புறத்தை நசுக்கிச் சாறெடுத்து விட்டு வைத்து வந்தாராம். மற்றொரு ரோம வைத்திய நிபுணராகிய பிளினி என்பவர் வெங்காயம் கண்ணீரை உற்பத்தி செய்வதால் கண்ணைப் பரிசுத்தமாக்கு மென்றார். ஜந்துக்கள் கடிக்கும்போதும் கொத்தும் போதும் வெங்காயம் ஒரு சஞ்சீவியாய் பயன்படுத்தப்பட்டு வந்தது. காயங்களையும் புண்களையும் வெங்காயம் குணப்படுத்துமாம். வாயை சுத்தம் செய்வதற்கும் அது உபயோகப்படுத்தப்பட்டது. வயிற்றுக் கடுப்புக்கு அது ஒரு உத்தம மருந்தென்று விளக்கப்பட வேண்டுவதன்று.

### அராபியாவில்

அராபியாவில் எல் இஸ்ரெய்லி வெங்காயம் உடல்கட்டுக்கே நல்லது என்றார். ரேசஸ் (Rhazes) என்பவர் வயிற்றுப் பசியை எழுப்புவதற்கு நல்ல ஔஷத மென்றார். அவிசென்னா வென்பவர் (Avicenna) வேதனை நிவாரணி என்று கருதினார்கள். பற்றுப் பூசுதற்கு இன்றும் உபயோகப் படுத்தப்படுகிறது.

### தற்காலத்தில்

பூர்வீக காலத்தைப் போலவே வெங்காயம் இப்போதும் மக்கள் மனதைப் பற்றி நிற்பதாகத் தெரிகிறது. 1835ல் பாலும் வெங்காயமும் உண்ணும் வழக்கம் தோன்றியது. இன்றும் மகோதரத்திற்கு அதனை சிபார்சு செய்வார் பலரிருக்கின்றனர். 1869 ம் வருடத்தில் உயிர்வாழ்ந்து வந்த திராஸ்டவுன் (Trastown) என்ற வைத்யர் தம்மிடம் குண்டிக்காய் சம்பந்தமான வியாதிகளை சிகிச்சிக்க வந்தவர்கட்கெல்லாம் பாலும் வெங்காயமும் கொடுத்து வந்தார். அவர் மகோதரமும் ஈரல் சளியும் வெங்காயத்தினால் நீங்கி விட்டதாகக் கூறினார் என்று தெரிகிறது. 1910 ம் வருடத்தில் டாக்டர் மான்கோர் (Man gour) என்பவர் மூன்று நாள் விடாது வெங்காயத்தை உண்டால் மகோதரமும் ஈரல் நீர்க்கட்டும் நீங்கிவிடுமென்று கண்டு பிடித்தார். மற்றொரு வைத்தியரும் தினம் 18 முதல் 20 வரை வெங்காயத்தை சாப்பிடச் சொன்னாராம். மகோதர நோயாளிகளிடம் இதேமாதிரி பிரஞ்சு டாக்டராகிய டாக்டர் டால்ஷி, டாக்டர் லெக்லெர்க் முதலியோரும் கூறுகின்றனர்.

### கிருமி நாசினி

வெங்காயத்திற்குக் கிருமிகளை (Germs) கொல்லும் சக்தியுண்டு என்பதை பலர் கூறி வந்திருக்கிறார்கள். சமீபத்தில் இக்கூற்று E. கூபோனி, C. மரியாண்டி என்ற இரு இத்தாலிய டாக்டர்களால் நிரூபிக்கப்பட்டது. அவர்கள் ஒரு பன்றியின் உடம்பில் க்ஷயரோகக் கிருமிகளை ஊசி மூலம் குத்தி யேற்றிவிட்டு, மூன்று நாட்களுக்கு ஒருதரம் வெங்காயச் சாற்றை ஊசி மூலம் குத்தி யேற்றி வந்தார்கள். கடைசியில் வெங்காயச் சாற்றினால் க்ஷயரோக கிருமிகள் அழிக்கப்பட்டன வென்று கண்டார்கள்.

வெங்காயமே நாம் உபயோகிக்கும் எல்லா மரக் கறிகளிலும் ஆரோக்கியம் மிக்கது. அதில் மாமிச சத்திருக்கிறது. காலையில் சாப்பிடவேண்டிய ஒரு நல்ல ஆகாரம் வெங்காய சூப்பாகும். ருசியிலும் ஆரோக்கிய மளிப்பதிலும் இதற்கீடான காய்கறிகளில்லை.

### தமிழ் வைத்தியர்கள்

(மேனாட்டு வைத்தியர்கள் இவ்வாறு கூற தமிழ் நாட்டார் வெங்காயத்தின் குணத்தை அறிய தவறி விடவில்லை. நம் பூர்வீகர் அதன் இயல்பறிந்தே நாம் சமைக்கும் கறி வகைகளிலெல்லாம் அதனைச் சேர்க்கும் பழக்கத்தை நிறுவியிருக்கிறார்கள். காலையில் தினசரி ஒரு தேயிலைக் காண்டி வெங்காயச் சாற்றில் ஒரு காண்டி தேனைக் கலந்து வெறும் வயிற்றில் சாப்பிட்டு வந்தால் உடல் பொன்னிறமாகுமென்று பூர்வீகர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர். மூன்று வாரம் தொடர்ந்து இம் முறையைக் கையாடி வந்தால் உடம்பு தங்க நிறம் பெறுவது நிச்சயம்)





## சிரம்பான் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தகச் சங்கம்

### நிர்வாக சபை கூட்டம்

1935-ம் ஆண்டு மே மாதம் 31உ வெள்ளிக்கிழமை, ஐந்தாவது ஆண்டு முதலாவது நிர்வாக சபைக் கூட்ட நிகழ்ச்சி மாலை 6-மணிக்கு சங்க காரியாலயத்தில் கூடியது. 9 நிர்வாக அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர். தலைவர் திரு. பழ. அ. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள்.

காரியதரிசியால், 31-3-35ல் கூடிய விசேஷப் பொதுக்கூட்ட நிகழ்ச்சி வாசிக்கப் பெற்று ஏக மனதாக அங்கீகரிக்கப் பெற்றது.

காரியதரிசியால், 1935-ம் வருடம் ஏப்ரல் மாதம் 1உ முதல் மே மாதம் 31உ வரையுள்ள சங்க கணக்கு வாசித்துக் காண்பிக்கப் பெற்று ஒப்புக்கொள்ளப் பெற்றது.

#### தீர்மானங்கள்

1. அயலூர்களுக்கு நியூஸ் அனுப்பும் ஸ்டாம்பு விஷயம் யோசிக்கப் பெற்று, நமது சங்கத்தில் தினசரி வெளியாகும் வர்த்தமான இதழ்களை கோலப்பிலா அங்கத்தினர்களுக்கு தினந்தோறும் அனுப்பி வருகிறதென்றும், போர்டிக்சன், தம்பின், சிம்மாஸ் அங்கத்தினர்களுக்கு மேற்படி இதழ்களை மூன்று நாளைக்கு ஒருமுறையாக வாரத்தில் இரண்டு முறை, அதாவது செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் அனுப்பி வருகிறதென்றும் ஏகமனதாக தீர்மானிக்கப் பெற்றது.

2. டிஸ்டிரிக்ட் ஆபீசர்களுக்கு ஒவ்வொரு குவார்ட்டருக்கும் கூப்பன் கொடுக்கும் தேதி விபர சர்க்குலர் காப்பி ஒன்று நமது சங்கத்திற்கு அனுப்பித்தர வேணுமென்று எழுதும்படி காரியதரிசிக்கு அனுமதி தரப் பெற்றது.

3. சிங்கப்பூரில் நடைபெற்ற அகில மலாயா நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கப் பிரதிநிதிகள் ஆலோசனைக் கூட்ட நடபடிக்கைகளைப் பற்றி பிரதிநிதியாகச் சென்றிருந்த பழ. கா. லெ. ராம. இராமனாதன் செட்டியாரவர்களால் தெரிவிக்கப் பெற்றது. மேற்படி பிரதிநிதி பழ. கா. லெ. ராம. இராமனாதன் செட்டியாரவர்களுக்கும், மேற்படி பிரதிநிதி பழ. அ. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் ஸ்தானத்திற்கு பிரதிநிதியாகச் சென்றிருந்த எ. கா. காசி விசுவநாதன் செட்டியாரவர்கட்கும் சிங்கப்பூர் போய் வந்த பிரயாண செலவு $24 கொடுக்கும்படி காரியதரிசிக்கு அனுமதி தரப் பெற்றது. காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப் பெற்று 7-மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி திரு. சொ. சித. சிதம்பரம் செட்டியார் எழுதுகிறார்.

---

# விமானத் தபால் விபரம்

### கராச்சி—சென்னைப் பாதை

| | | | |
|---|---|---|---|
| காாச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வெள்ளி | திங்கள் |
| ஆமதாபாத் | புறப்படும ,, | ,, | ,, |
| பம்பாய் | ,, | ,, | ,, |
| ஹைதராபாத் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் | சனிக்கிழமை | செவ்வாய் |
| சென்னை | வரும் நாள் | சனிக்கிழமை | செவ்வாய் |

### சென்னை—கராச்சிப் பாதை

| | | | |
|---|---|---|---|
| சென்னையிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| ஹைதராபாத் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| பம்பாய் | ,, | ,, | ,, |
| ஆமதாபாத் | ,, | ,, | ,, |
| காாச்சி | வரும் நாள் | செவ்வாய் | சனி |

### கராச்சி—கல்கத்தா—ரங்கூன்
(டாடா ஏர் சர்விஸ்)

| | | | |
|---|---|---|---|
| காாச்சியிலிருந்து | புறப்படும் நாள் | வியாழன் | ஞாயிறு |
| ஜோட்பூருக்கு | வரும் நாள் | ,, | ,, |
| ஜோட்பூர் | புறப்படும் நாள் | வெள்ளி | திங்கள் |
| கல்கத்தா | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| ரங்கூன் | வரும் நாள் | ,, | ,, |

### ரங்கூன்—கல்கத்தா—கராச்சி

| | | | |
|---|---|---|---|
| ரங்கூனிலிருந்து | புறப்படும் நாள் | திங்கள் | வெள்ளி |
| கல்கத்தா | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | செவ்வாய் | சனி |
| ஜோட்பூர் | வரும் நாள் | ,, | ,, |
| ,, | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| காாச்சி | வரும் நாள் | ,, | ,, |

### கிராய்டன் (லண்டன்) கராச்சி

| | | | |
|---|---|---|---|
| கிராய்டன் | புறப்படும் நாள் | சனி | செவ்வாய் |
| காாச்சி | வரும் நாள் | வியாழன் | ஞாயிறு |

### கராச்சி—கிராய்டன்

| | | | |
|---|---|---|---|
| காாச்சி | புறப்படும் நாள் | புதன் | ஞாயிறு |
| கிராய்டன் | வரும் நாள் | திங்கள் | வெள்ளி |

## கட்டண விகிதம்

### இந்தியாவிலிருந்து

இங்கிலாந்து அல்லது ஐயர்லாந்துக்கு (ஆகாயத் தபாலில்) அனுப்பப்படும் எந்த கடிதங்கட்கும் முதல் ஔன்ஸுக்கு 7½ அணுவும் அப்பால் ஒவ்வொரு ஔன்சுக்கும் 7 அணுவும் ஸ்டாம்புக் கட்டணம் செலுத்தப்பட வேண்டும்.

டச்சு கிழக்கிந்தியத் தீவுகள், ஆஸ்திரேலியா ஆகிய தேசங்கட்கு அரை ஔன்ஸ் காகிதங்கட்கு முறையே 6 அணு, 8 அணு 6 பைசா தபால் கட்டணமும் சாதாரண தபால் கட்டண விகிதமும் செலுத்த வேண்டும். ரிஜிஸ்தர் கடிதமாக விருந்தால் அதற்கான 3 அணு கட்டணம் தனியாகச் செலுத்தப்பட வேண்டும்.

கார்டுகட்குக் கட்டணம் 4 அணு.

### இந்தியா பர்மாவுக்குள் எந்த இடத்திற்கும் ஆகாயத்தபாலில் கடிதமனுப்ப.

ஒவ்வொரு அரைத் தோலாவுக்கும் 2 அணு. அரைக்கு மேல் ஒரு தோலா வரை இருந்தால் சாதாரணத் தபால் கட்டணமும் 2 அணுவும் அதற்குமேற்பட்ட ஒவ்வொரு இரண்டு தோலாவுக்கும் 2 அணுவும் சாதாரண தபால் விகிதமும்.

### தபால் நேரம்

பம்பாய், காாச்சி முதலியவிடங்கட்கு சென்னையில் ஆகாயத் தபால் கடிதங்கள் ஜெனரல் போஸ்டாபீஸில் சேர்ப்பிக்கப்பட வேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| திங்கள் | பகல் | 12—15 |
| வெள்ளி | ,, | 12—0 |

ரங்கூன் செல்லும் விமானத் தபால் கடிதங்களை "போஸ்டு" செய்யவேண்டிய கடைசி நேரம்:—

| | | |
|---|---|---|
| புதன் | மாலை | 6—25 |
| சனி | மாலை | 3—0 |

# நாடக உலகில் பதி-பக்தி

(ஒரு நிருபர் எழுதுகிறார்)

இன்று குவெட்டா பூகம்பம் காண்கிறோம். அன்று பீகார் பூகம்பம் கண்டோம். இரண்டிற்கு முன்னதாகவே நாடக பூகம்பம் உண்டாகிவிட்டது. நாடக கம்பெனிகள் மறைந்து விட்டன கூலிக்கு ஆள் பிடிப்பது போல் பிரபல நடிகர் இரண்டொருவரை மட்டும் அமர்த்தி நாடகம் என்று பேருக்கு மட்டும் ஓரொரு சமயம் அத்தி பூப்பது போல் நடிப்பதுண்டு. அங்ஙனம் நடப்பனவும் நாடகமாக இரா. சங்கீத கச்சேரிகளாகவே இருக்கும். நடிப்பு இல்லாத ஒன்றை நாடகம் எனல் தகுமா?

உலகப் பிரசித்திப் பெற்ற மேனாட்டு நடிகரான சார்லி சாப்லின் என்பார் நடிப்பின் உயர்வை நன்கறிந்து அதற்கு பங்கம் விளைவிக்கக் கூடாதெனக் கொண்டு பேச்சின்றி நடிப்பதில் மோகமுள்ளவர். பேச்சின்றி நடிக்கும் மலையாள "கதாகளி"க்கு இணை உளதோ. சங்கீதம் எனும் பூகம்பம் தோன்றி நாடகத்தை உருக்குலைத்து விட்டது ஒரு புற மிருக்க, சினிமா என்பதும் தோன்றி நாடகம் எனும் பெயரையே போக்கி விடும் போலிருக்கிறது. இத்தகைய நிலையில் நாடகத்தை நிலைநாட்ட மாராதபடி நிற்கும் "மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியை" யாவரும் போற்ற வேண்டும்.

கால தேச வர்த்தமானத்தை மதிப்பின், புராண சம்பந்தமான நாடகங்களில் மூழ்கி கிடத்தல் சரியன்று. சமூக ஆசார சீர்திருத்தங்களுக்கு உரிய நாடகங்களே தற்சமயம் நாட்டினுக்கு தேவையாம். இதனை முன்னதாகவே அறிந்து மேற் கொண்ட பெருமை "மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனிக்கே உரியதாகும். பதி பக்தி கதர் பக்தி, பஞ்சாப் கேசரி, பம்பாய் மெயில், கவர்னர்ஸ் கப், போன்ற நவீன நாடகங்களை அக் கம்பெனி ஆடி வருதல் பிரசித்தம். கேவலம் பொருள் வருவாயை மட்டும் மதியாமல் சமூக நலத்தையும் முக்கியமாக மதித்தல் போற்றற்குரியதாம்,

குடி கெடுக்கும் கட்குடியை ஒழிக்கவும், குடிசைத் தொழில்களை உயிர்ப்பிக்கவும், காந்தி மகானும் காங்கிரசும் உழைத்து வருதல் பிரசித்தம். அவ்விரண்டையும் மக்கள் மனத்தில் பசு மரத்தாணிபோல் பதியச் செய்யும் நோக்கத்துடன் பதி பக்தி எனும் நாடகத்தை



கோயம்புத்தூர் சகுந்தலா பிலிம்ஸ் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்ட "ஞானசௌந்தரி" என்னும் தமிழ்ப் பேசும் படத்தில் ஒரு காட்சி,

அக் கம்பெனியார் நடத்தி வருகின்றனர். அந் நாடகத்தை காணின் கல் நெஞ்சும் கரையும். ஐயறிவு உயிர்களும் உருகும்.

நேற்று செவ்வாய்க்கிழமை இரவு அந் நாடகத்தை கண்டோர் அனைவரும் கண்ணீர் வடித்த வண்ணமாக இருந்தனர். சிலர் அலறியும் அழுதனர். பிரதம பாத்திரமான ராஜசேகரன் மதுவில் மூழ்கி மதிமயங்கி, மனைவிமக்களை துன்புறுத்துவது கண்டு குழந்தைகளும் தேம்பின. அவனை திருத்த முயற்ற அரிய நண்பன் சம்பந்தம் அபவாதத்திற்கு ஆளாவதும் அநியாயமாக கொலையுண்பதும் கண்டு உள்ளம் உடையாதார் இல்லை. அப்பால் ராஜசேகரின் கொலைக் குற்றத்திற்கு இலக்காகி வீடு வாசலையும் மனைவி மகளையும் துறந்து ஊரை விட்டு ஓடி தேயிலை தோட்டத்தில் கூலியாக அமர்ந்து அடியும் உதையும் படுவதையும் கண்டு யாரே பரிதவியாதார்?

கள் குடியனை ராஜசேகரனது மனையாளை இச்சி கங்காதரன் புரியும் வஞ்சனையும், இழைக்கும் மாயமும், கெடுமதி கொண்ட உலகை உள்ளங்கை நெல்லிக்கனிப் போல் காட்டுவதாகவே இருந்தது. நட்பின் நலத்தையும் பரிதாபத்தையுமே ஆதாரமாக கொண்டு துப்பறியும் சந்தானத்தின் தீரத்துக்கும் மதி வன்மைக்கும் இணையில்லை. அறம் வெல்லும், பாபம் தோற்கும் என்பதை ராஜசேகரன் மரணத்தருவாயில் மீட்கப்படுவதும், சூழ்ச்சியாளன் கங்காதரன் தூக்கில் ஏறுவதுமே புலப்படுத்தும். ஆதி முதல் அந்தம் வரையில் நாடகம் நாடகமாகவே இருந்தது.

பதி பக்தியில் ஒரே பாட்டு மயம் எனும் குற்றம் கிடையாது. பலரையும் பாவசப்படுத்தும் பேச்சே மிகுதி. மனதை கவரும் நடிப்போ மிக நயம். வீண் பாட்டும் வெறும் பேச்சுமின்றி அர்த்தபுஷ்டியுள்ள நடிப்பே தலைசிறந்த தென்பதை துப்பறியும் சந்தானத்தின் ஊமை நடிப்பு உணர்த்தி நின்றது. கண்ணும் காதும் கொள்ளும் இன்பம் கணப்பொழுதில் மறையக்கூடும். சிந்தையிற் றைக்கும் துன்பமும், மிளிரும் இன்பமும் உயிர் உள்ளளவும் அழியா என்பதை "பதி பக்தி" அறிவுறுத்துகிறது.

வடநாட்டு சினிமாக்களில் சமூக ஆசார சீர்திருத்த நாடகங்களே அதிகம். தென்னாட்டு சினிமாக்களிலோ புராணக் கதைகளே அதிகம். இக் குறையை நிவர்த்திக்க கருதியும், நாட்டின் நலத்தை கோரியும் "பதி பக்தியை" சினிமாவில் எடுக்க முயற்சி செய்வது கண்டு பலரும் மெச்சுவர். சினிமாப் படம் பிடிப்பதென்றால் தமிழ்நாட்டார் பலரும் வட இந்தியாவிடம் பிச்சை கேட்க வேண்டியிருக்கிறது. அந்த ஈனத்தைப் போக்கி தமிழ் மக்களின் மானத்தைக் காப்பாற்ற லக்ஷக்கணக்கான பணச் சிலவில் சென்னை நகரில் நிறுவப்புள்ள மிக உன்னதமான "நேஷனல் மூவிடோன் சிட்டியில்" மேற்படி படம் பிடிக்கப்படுதல் குறிப்பிட்டத்தக்கதாகும். இத்தகைய நன்னோக்குள்ள கம்பெனி மென்மேலும் விருத்தியாகி நாட்டுக்கு நலம்புரியுமென எதிர்பார்க்கிறோம்.

---

## பக்த பட்டினத்தார்

லோடஸ் பிக்சர்ஸ் கம்பெனியார் தங்களுடைய சொந்த மிஷின்களைக் கொண்டும் வாடியாமூவிடோன் Techinician கொண்டும் தென் இந்தியாவில் பல ஸீன்கள் எடுக்கப் போவதாகத் தெரிகிறது. பொம்பாயில் வாடியா ஸ்டூடியோவில் முக்கியமான செட்டிங்குகள் தயார் செய்யப்பட்டு ஸீன்கள் எடுக்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. இந்தக் கம்பெனியார் சித்திரைமீ முதல் தேதி யன்றே இப்படம் எடுக்கப் போவதாக பிரசுரம் செய்தார். இவர்கள் ஒரிஜன் சாவலை கதாவின் மேன்மையைப் பற்றி ஏற்கனவே நமது பேப்பரில் எழுதி யிருக்கிறோம். இவர்களுடைய புதிய படமும் நன்றாகவே எடுக்கப்பெற்று மேன்மை பெற்று நன்கு விளங்குமென்று நம்புகிறோம்.

---



## இங்கிலாந்து மந்திரிகள் விவரம்

பிரதம மந்திரி மிஸ்டர் ராம்ஸே மாக்டனால்டின் ராஜினாமா ஏற்றுக்கொள்ளப்பட்டதன் பேரில் கன்சர்வேடிவ் கட்சித் தலைவரான மிஸ்டர் பால்டுவின் கீழ்க்கண்டவாறு புதிய மந்திரி சபை அமைத்துள்ளார்:—

1. ஸ்டேன்லி பால்டுவின்—பிரதம மந்திரி.

2. ராம்ஸே மாக்டனால்ட்—மந்திரி சபை உபத் தலைவர்.

3. லார்டு ஹெயில் ஷாம்—லார்டு சான்ஸலர்.

4 ஸர்ஜான் ஸைமன்—உள் நாட்டுக் காரியதரிசி.

5. ஸர் ஸாமியுல் ஹோர்—அந்நிய விவகார மந்திரி.

6. ஸெட்லண்ட் பிரபு—இந்திய மந்திரி.

7. நெவில்லி சேம்பர்லேன்—பொக்கிஷ மந்திரி.

8. லார்டு லண்டன்டெர்ரி—லார்டு பிரிவி ஸீல்.

9. யுத்த மந்திரி—லார்டு ஹலிபாக்ஸ் (இர்வின்)

10. ஸர் கன்லிப் லிஸ்டர்—ஆகாயப் படை மந்திரி.

11. மால்கம் மாக்டனால்ட்—குடியேற்ற நாட்டு மந்திரி.

12. ஏர்னஸ்ட் பிரௌன்—தொழில் இலாகா மந்திரி.

13. ஆலிவர் ஸ்டேன்லி—கல்வி போர்டின் தலைவர்.

14. ஸர் கிங்ஸ்லி வுட்—சுகாதார இலாகா மந்திரி.

15. மிஸ்டர் வால்டர் எலியட்—விவசாய மந்திரி.

16. ஆர். ஏ. பட்லர்—உப இந்தியா மந்திரி.

---

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் மக்களின் 40 லட்சம் இரட்டைப் பிறவிகள் இருக்கின்றனவாம். 600,000 ஆண் ஜோடிகளும், 625,000-பெண் ஜோடிகளும், 935 கலப்பு ஜோடிகளுமாக பத்து லட்சம் கணக்கில் தற்போது இரட்டைக் குழந்தைகள் இருக்கின்றனவென்று மெட்ரோபாலிடன் லைப் இன்ஷூரன்ஸ் கம்பெனியார் வெளியிட்டிருக்கும் அறிக்கை ஒன்று கூறுகிறது. அமெரிக்காவில் இரட்டைக் குழந்தைகள் வரவர அதிகமாகப் பிறக்கின்றனவாம். அதன் காரணத்தை உயிர் நூல் நிபுணர்கள் ஆராய்ந்து வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

## பாகனேரி

### ஆண்டு விழா ஒத்திவைப்பு

சில பிரமுகர்களின் அசௌகரியத்தை முன்னிட்டு பாகனேரி தனவைசிய இளஞர் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டுவிழா ஒத்திவைக்கப் பட்டிருப்பதாக காரியதரிசி எழுதுகிறார்.

## பாகனேரியில்

### குவெட்டா பூகம்ப நிதி

பாகனேரி தனவைசிய இளஞர் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் ஜூன் 12ந் தேதி பெருமாள் கோவில் மண்டபத்தில் ஒரு விசேஷக் கூட்டம் கூடிற்று அவ்வமயம் திரு. சி. வ. சி. ச. சபாபதி செட்டியாரவர்கள் தலைமையில் பலர் குவெட்டா பூகம்பத்தால் விளைந்த பரிதாபகரச் செய்திகளைச் சபையோருக் கூறி ஒவ்வொருவரும் தம்மாலியன்ற அளவு குவெட்டாவில் அல்லல்படும் ஜனங்களுக்குப் பணவுதவி செய்யுமாறு கேட்டுக் கொண்டனர்.

கூட்டம் முடிந்தவுடன் தொண்டர்கள் பணம் வசூலிக்க ஆரம்பித்தனர். இன்னும் சில தினங்களில் வசூலித்த பணம் குவெட்டா பூகம்ப நிதிக்கு அனுப்பப்படும் என்று உபகாரியதரிசி திரு. வே. மாணிக்கம் எழுதுகிறார்.

---

## ராஜாங்க சபைக்கு ஆயுள் நீடிப்பு

இந்திய சர்க்கார் காரியாலயத்திலிருந்து பின் கண்ட அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறது. இந்தியா சட்ட சபைக் கூட்டம் நடை பெற்றுக் கொண்டிருக்கையில், 1936-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 10-ம் தேதியுடன் இந்திய ராஜாங்க சபையின் ஆயுள் முடிவதால், 1936-ம் வருஷத்திய வரவுசெலவு திட்டம் கவனிக்கப்படும் கூட்டம் முடிவாகும் வரை அதன் ஆயுளை நீடிப்பதாக கவர்னர் ஜெனரல் முடிவு செய்துள்ளார்: அக் கூட்டம் முடிவடைந்தவுடன் புதிய தேர்தல் நடத்த அறிக்கை வெளியிடப்படும்.

---

"வந்தே மாதரம்" என்ற வங்காளித் தினசரிப் பத்திரிகையின் நிர்வாகிகள் ரூ. 3000-மும் அப்பத்திரிகையை அச்சடிக்கும் "சாந்தி அச்சுக்கூடத்"தின் சொந்தக்காரர்கள் ரூ 3000 மும் ஜாமீனுகக் கட்ட வேண்டுமென வங்க சர்க்கார் உத்திர விட்டிருக்கின்றனர். மே மாதம் 10ந் தேதி மன்னரின் வெள்ளி ஜூபிளி விழா சம்பந்தமாக வெளியான கட்டுரையே இவ்வுத்திரவுக்குக் காரணமாகும். அப் பத்திரிகையும், அச்சுக்கூடமும் ஜாமீன் தொகைகளை ஜூன் 21ந் தேதிக்குள் கட்ட வேண்டும்.

---



## ரயில் போக்கு வரவு

### மதராஸ்-எழும்பூர்

#### மெயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
| --- | --- | --- |
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 7 15 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 15 | காலை 11 30 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர் .... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 35 |

#### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
| --- | --- | --- |
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 30 | மாலை 2 40 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 00 | காலை 7 15 |

### மதராஸ்—செண்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
| --- | --- | --- |
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| „ எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| „ பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| „ „ .... | மாலை 9 40 | காலை 5 ?0 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| „ .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 15 |
| ப்ளூமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |



# செய்தித் திரட்டு.



மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரி அண்ணாமலை சர்வகலாசாலையின் வைஸ் சான்சலராக (உப அத்தியக்ஷராக) நியமிக்கப்பட்டிருக்கிறார்.

* * *

8-ந் தேதி இறுதியாகவுள்ள ஒரு வாரத்தில் புது டில்லி நகரில் தட்டம்மையால் 29 பேர் மாண்டனர். வைசூரியால் 24 பேர் மண்டனர். இந்த வாரத்தில் மொத்தம் 337 பேர் மாண்டனர்.

* * *

உடுமலைப்பேட்டையில் கடும் வெயில் காற்றினால் மிகுதியும் கிணறுகளில் உப்பு நீரும் வற்றி விட்டதினால் குடிக்கும் ஜலம் ஒரு குடம் அணா 2-க்குக் கிடைப்பதரிதாகி விட்டது.

* * *

குடிவாடாவுக்கு சமீபத்திலுள்ள சவுதபள்ளி என்ற கிராமத்தில் பெரும் விபத்து ஏற்பட்டது. ரூ. 80000க்கு பண நோட்டும், நகைகளும், வெள்ளிச் சாமான்களும் நஷ்டம் ஏற்பட்டது.

* * *

ருஷ்யாவில் எவரும் குழந்தைகளை அடிப்பதில்லை. பெற்றோர்களாயினும் சரி, குழந்தைகளை அடிப்பாராயின் உடன் வழக்குத் தொடரப்படும். அஃது ஓர் தண்டனைக்குரிய பெரும் குற்றமாகக் கருதப்படுகிறது.

* * *

ரங்கூனில் ஒரு இளம் சீனப் பெண்ணின் கல்லறையைத் தோண்டி பெண்ணின் இரு தங்கப் பற்களையும், வெல்வெட் செருப்பையும் யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள்.

* * *

கொழும்பில் ஸ்ரீ கதிர்வேலாயுத சுவாமி ஆனி 31வ (15—7—35) காலை $7\frac{1}{4}$-மணிக்கு வெள்ளவத்தைக்குச் சென்று மீண்டும் 18-7-35ல் மாலை 4-மணிக்கு கொழும்புக்கு எழுந்தருளுவர் என்று கொழும்பு வாசிகள் தெரிவித்துள்ளார்.

* * *

ஹிருதய உபாதியால் கஷ்டப்பட்டு வரும் ஸ்ரீமதி. ஜவர்லால் நேரு தமது புதல்வியுடன் பர்லின் வந்து சேர்ந்தார். பண்டிதர். அன்வர் ரிர்ச்செட்டின் பிரபல வைத்தியசாலையில் அவருக்கு பண்டிதர் பிரத்தியேகமாக சிகிச்சை செய்வார்.

* * *

திருநெல்வேலி முனிசிபாலிட்டியில் விபசாரத் தடை வேண்டியதில்லையென்றும், மூன்று மாதங்களுக்கு முன்னர் விபசாரத் தடை சட்டத்தை திருநெல்வேலி முனிசிபாலிட்டியில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற முனிசிபல் சபை தீர்மானத்தை ரத்துச் செய்வதாயும் தீர்மானித்தனர்.

* * *

சிகாகோவில் 20,000 பேர் ஒரே சமயத்தில் உட்கார்ந்து பார்க்கக் கூடிய மாதிரியில் ஒரு டாக்கி தியேட்டர் கட்டப்பட்டிருக்கிறது. இது செவிடர்களுக்கென்றே கட்டப்பட்ட டாக்கி. ஒவ்வோர் ஆசனத்திலும் ஒரு மின்சார பட்டன் இணைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பட்டன்கள் தியேட்டரின் பாடுங் கருவியுடன் சேர்க்கப்பட்டிருப்பதால் அந்தப் பட்டன்களை எடுத்து காதின் பின்புறம் வைத்துக் கொண்டால் ஸினிமாப் படம் பார்ப்பதுடன், பாட்டையும் கேட்கக் கூடுமாம்.

* * *







தொழிலாளர் கிளர்ச்சி இங்கிலாந்தில் சுமார் 630 வருஷங்களாக இருந்து வருவதாக சரித்திர விபரங்கள் கூறுகின்றன. 1303-ம் வருஷம் கயிறு திரிக்கும் கீழ்த்தர வேலைக்காரர்கள் தங்கள் முதலாளிகளின் நிர்வாகத்தின் மீது அதிருப்தி கொண்டு முதல் முதலாகக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள்.

* * *

சென்ற ஏப்ரல் 6-ந் தேதியன்று தேசீய வாரக் கொண்டாட்டம் சம்பந்தமாக ஒரு பொதுக் கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசுகையில் ராஜத்துவேஷம் நிறைந்த கருத்துக்களை வெளியிட்டதாக வங்க காங்கிரஸ் தேசியக் கட்சியின் காரியதரிசியான டாக்டர் இந்திர நாராயண சென்குப்தா மீது சர்க்கார் ராஜத் துவேஷக் குற்றம் சாட்டினர். தாம் குற்றவாளியல்லவென எதிரி தெரிவித்தார். வழக்கு ஒத்திவைக்கப்பட்டது.

* * *

சென்னை பார்ஸி சமூகத்தில் பிரபலஸ்தரான கிளப்வாலா என்பவர் சென்ற மாதம் இதாலி தேசத்தில் இறந்து போனார். அவர் சவத்தை சென்னைக்கு கொண்டு வந்தனர். துறைமுகத்திற்கு அநேகம் பார்ஸிகள் வந்து சவத்தை எடுத்துக் கொண்டு ராயபுரத்தில் கிளப் வாலா வீட்டிற்கு கொண்டு போனார்கள்.

* * *





உங்கள் ஆயுள் எவ்வளவு என்பதை அறிவதற்கு இனி நீங்கள் ஜோசியரைக் கேட்க வேண்டியதில்லையாம். இப்பொழுது மான் ஹாட்டனில் இருக்கும் டாக்டர் பெர்ன்மன் என்ற ஜெர்மன் அறிஞர் கண்டுபிடித்திருக்கும் கருவியால் உங்கள் ஆயுள் காலத்தை அறிந்து விடலாமாம்.

* * *

மாஸ்கானிலுள்ள உதவி பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஜீவனாம்ச வழக்கு ஒன்று விசாரிக்கப்படுகையில் எதிர்மனுதார் இன்மெயில் பூசப் தம்மை ஒருவர் கொல்ல வருவதாகவும் அங்குள்ளவர்கள் காப்பாற்ற வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். இதற்குள் ஒருவர் கோர்ட்டுக்குள் நுழைந்து அவரைத் தம்பில் கத்தியால் குத்திவிட்டார். குத்தியவர் வழக்குத் தொடுத்த மனைவியின் ஏஜெண்டு எனச் சொல்லப்படுகிறது.

* * *

இந்தியாவின் மத்திய பாகங்களிலும் நேபாள தேசத்தைச் சேர்ந்த சில இடங்களிலும் சில விநோதமான மரங்கள் இருக்கின்றன. இவற்றில் சில மரங்களைத் தொட்டால் மின்சாரத்தைத் தொட்டால் ஏற்படும் 'ஷாக்' போல் கையில் "ஷாக்" அடிக்கின்றன. இன்னும் சில மரங்கள் வேறு மரங்களையே தின்று அழித்து விடுகின்றன. இம்மாதிரியான மரங்களின் விதையைப் பறவைகள் வேறு எந்த மரங்களிலாவது கொண்டுபோய்ப் போட்டுவிட்டால் கொஞ்சம் கொஞ்சமாக இந்த விநோதச் செடி முளைக்க ஆரம்பித்து பிறகு தான் தோன்றின மரத்தையே அழித்து விட்டுப் பெரிய மரமாகி விடுகிறதாம். ஆனால் இந்த விநோத மரங்களால் ஒரு உபயோகமுமில்லை.

* * *

